உ

தேவிசகாயம்.

# BALAVYTHIA BOTHINI

ஹிந்து

# பாலவைத்தியபோதினி.

இஃது

ஆ-ச-சி. பாலஞானபரதேசி

அவர்களாலும்

செழுமணவை

நல்லண்ணபரதேசி

அவர்களாலும்

கையாண்டுவந்த அநுபவமுறைகள்யாவும்

ஷையார்களின் சிஷ்யர்

ஞானசுந்தரஸ்வாமிகளின்

உத்திரவின்படி

சிறுமணவூர்.

முனிசாமிமுதலியாரால்

எழுதப்பட்டு,

—(*)—

ஆதிபுரி.

இரத்னவேல்முதலியார்

அவர்களது

வாணீவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.





**MADRAS**

1895

உ

கடவுள் துணை

# விளம்பரம்.

—(*)—

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை நாராயணமுதலி வீதி (52) வது கதவிலக்கமுள்ள வீட்டில்ஸ் தாபித்திருக்கும் வாணீவிலாச அச்சுக்கூடத் தலைவராகிய ஆ - இரத்தினவேலு முதலியாரிடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

ரிப்ளைகார்ட் அல்லதுஸ்டாம்பு அனுப்பினால்பதில்கிடைக்கும்.

புத்தகம் ஒன்றுக்குவிலை அணா—10
வி- பி- போஸ்டேசார்ஜ் அணா—3

10 -புத்தகம் ஓரேதடவை வாங்கினால் ஒருபுத்தகம் கமிஷன் கொடுக்கப்படும்.

இப்படிக்கு
☞ ஆ இரத்தினவேலுமுதலியார்.



உ

கடவுள் துணை.

# முகவுரை.

———(*)———

அளவிடுதற்கரிய சிறப்புவாய்ந்த இவ்வுலகத்தின்கண் சர்வவுயிர்களும் சரண்புகத்தக்கமூர்த்தராகியசித்தர்கள் பதினெண்பெயரும் திருவாய் மலர்ந்தருளிய வைத்திய சாஸ்திரங்கள் ஏராளமாயிருப்பினும் தற்காலநிலைமைக்கியன்றவாறு ஷை சாஸ்திரங்களை யனுசரித்த நிகண்டுகள்முதலான அகராதிகளைக்கண்ணுறுது கையாடும்பேர்க்கு பயன்படாதென்பது திண்ணமாக்க் காட்டுகிறதுபற்றி இந்நூல் இசைத்தலாயினேம் ஆயினும்முதனூல் வழிநூலென்னும் சித்தர்களநூலும் மற்றவர்நூலும் கொண்டே யாராய்ச்சிசெய்து அநுபவ திருஷ்டாந்தங்களைக் கொண்டு குழந்தைகளுக் கிசைந்த சிகிச்சாபக்குவங்களை மாத்திரம்ஒருங்கேதிரட்டி செய்யுட்களா யுள்ளனவற்றை அகராதிகள் வேண்டாதுயாவரும் எளிதிலறியத்தக்க வசனரூபமாக மொழிபெயர்த்து அவ்வசனங்கடோறும் வினாவிடைகளாக வகுத்து யேனைய புல்லறிவினர்க்கும் யெளிதில் விளங்கும்படி வெள்ளியபாவனையாக வறையப்பட்டது.

இந்நூல் வாணீவிலாசம்பிரஸ்ஸாபீஸ் தலைவர் ம-ள-ள-ஸ்ரீ ஆ-இரத்தினவேலு முதலியாரவர்கள் முயற்சியின்படி சிறுமணவூர் முனிசாமி முதலியாராலியற்றி (ஹிந்துபாலவைத்திய போதினி) யென்னும் பெயரமைத்து அச்சிட்டு பயிரங்கப்படுத்தலாயிற்று.

## கவனிப்பு.

இந்நூலுக்கு எம்மா லமைக்கப்பட்ட பெயரைக்கொண்டாவது விஷயங்கள் முன்பின்பிரட்டியும் அல்லது அதிகப்படுத்தியுமாவது வேறுபாஷைகளிலாவது அன்னியர்கள் யெவ்விதத்தும் எமதநுமதியின்றி அச்சிடாதபடிக்கு மஹாகனம்பொருந்திய கவரன்மெட்டு சட்டப்படி ரிஜிஸ்டர் காபிரைட் செய்யப்பட்டிருக்கிறதென்பதை யாவருமறிவீர்களாக.

இப்படிக்கு

 சி. முனுசாமிமுதலியார்

உ

தேவிசகாயம்.

ஹிந்து

# பாலவைத்தியபோதினியின்

## அட்டவணை.

# அட்டவணை.

# அட்டவணை.

## கரப்பான்வகுப்பு.



## குளிகைவகுப்பு.



# அட்டவணை.



அட்டவணை

முற்றிற்று.

—(*)—

உ

கணபதிசகாயம்.

ஸ்ரீ நந்து

# பாலவைத்திய போதினி.

## முன்னவன்றுதி

வெண்பா.

ஊழியின் கடைநடுவிற் றரியதுரி யாதீதம்
பொழியு மதிரவியைப் போற்றிப்பின்— னழியா
அகார முதற் கொண்டிலகு மைம்பத்தோ ரட்சரமும்
புகழ்மூலக் கணபதியைப் போற்று.

———(*)———

## கடவுள்வணக்கம்

சீரானபராபரத்திற் பரமாய்நின்று
திரிபுவனந்தாங்கி யவையாதாரமாய்நின்ற
பேரானவஸ்துவெனும் விமலர்பாதம்
பேணியேநமஸ்கரித்துப் பிரியமாக
நேரானபாலவைத்தியத்தைசொல்ல
நினைந்துமுன்னூல் விதிப்படியே நேர்மைகொண்டு
ஞானமதிமாயை வெல்லவேண்டி
சொல்லுவேனுள்ளபடி சொல்லுவேனே. (க)

## கேழ்வி—கலிவிருத்தம்.

பாலரோக நற்பக்குவமென்றிந்த
ஞாலமீதுநவின்றிட வந்தனே
கோலமாதர்குழிக் கருத்தங்குநாள்
சீல்மாகச்சிகிச்சைக ளுள்ளவோ. (உ)

கருத்து. அல்லது. வினு. } பாலவைத்தியபக்குவமென்பதுசகலருக்கும் எளிதில்விளங்கி தாங்களேதாங்களேகூடியமட்டும் அவிழ்தானு பானங்களைக் கையாடலா மென்ப தற்கு திருஷ்டாந்தம் இப்புத்தகத்தின்பேர் கேழ்க்குமளவில் தெரியவருகிறது. ஆயினும் பாலர்கள்ஜெனித்தபிறகு உபயோகப்படுத்தும் அவிழ்தபக்குவமேயன்றிமுதன்மையாகநமக்குஇன்பத்தைநல்கி தமக்கு துன்பத்தை யேந்தும் வண்ணமே ஸ்திரீகளானவர் தமதுகர்ப்பத்தின் வாயிலா மூன்னூறுநாளும்சுமந்தயர்ந்துஅளிக்குமுன்னம் இச்சிசுக்களால் தங்களுக்கோர் துன்பமும் அணுகாதபடிகாப்பதுமுதற் கடனுயிருப்பதுமற்றியே கேழ்க்கலாயிற்று பிரசவிக்காதற்குமுன்னம் ஸ்திரீகளின்வியாதிக்குசிகிச்சைகளுண்டா வென்பது கருத்து.

விடை. குளிகின்றமாதம் யென்னும் ரகசியஸ்தானம் யென்றும் வழங்கிய கருதரித்தமுதல் மாதத்தில் ஸ்திரீகளுக்கு வயற்றுவலி காணுமாகில் அதாவதுஅடிவயர் நமநம வென்று நோய்காணுமாகில்-தாமரைப்பூ-குட்டிவிளாயிலை-இவிரண்டும்அரைபலம் - சந்தனத்தூள் - அரிக்கால்பலமும்கூட்டி நல்லஜலம்விட்டரைத்து ஆழாக்கு-பசும்பாலில்கலக்கி கொடுக்கவும் இப்படி-௩-நாள் காலையில்கொடுக்க நிவர்த்தியாம்.

2-ம்-மாதத்தில் ஷை-வயற்றுநோய்அல்லது தேகம்முழுமையும் வாய்வு சம்பந்தமாய் மந்தப்படுமாகில் வெற்றிலை - ம- தாமரைப்பூயிதழ்-ம- இவ்விரண்டையும் முன்போலரைத்துபசுவின்பாலில்கரைதுக் கொடுக்கவும்இப்படி ௩-நாள்கொடுக்க நீங்கும்.

3-ம்-மாதத்தில் வயறுமுறுக்கியும் நாய்போற்கவ்வியும் துன்பங்கொடுக்குமாகில் வெண்டாமரைப் பூவின்இதழ் (கால் பலம்) செங்கழுநீர்க்கிழங்கு (கால்பலம்) இவைகளை

அரைத்து பசுவின்பாலில்கரைத்து கொடுக்க நீங்கும் இப்படி ௩-நாள் கொடுக்கவும்.

4-ம்-மாதத்தில்-வயற்றில்நோய் அல்லது இரத்தம்பாவினும் இரத்தம் வெளிக்குப்பிரவேசித்தாலும் நெய்தல்கிழங்கு அதாவது கோரைக்கிழங்கு (கால்பலம்) நொச்சியிலை-(கால்பலம்) இவைகளை அரைத்துபசுவின்பாலில் கரைத்து கொடுக்கநீங்கும் இப்படி - ௩-நாள் கொடுக்கவும்.

5-ம்-மாதத்தில் - வயற்றினிடமாக யாதொருநோய் சம்பவித்தாலும்-அல்லித்தாமரைப்பூ - (கால்பலம்) விலாமிச்சம் வேர் அதாவதுகுட்டிவிளாம்வேர்-(கால்பலம்) இவைகளை அரைத்து - பசுவின்பாலில் கலக்கிகொடுக்கநிவர்த்தியாகும் இப்படி-௩-நாள் கொடுக்கவும்

6-ம்- மாதத்தில் கெற்பத்தினிடமாக அழல் குடல்வலி நீர்சுருக்குமுதலான வியாதிகள்காணுமாகில் பச்சைதிப்பிலி முந்திரிகைசேர்ந்த நெய்தற்கிழங்கு அரைத்துபசும்பாலில் காலையில்கொடுக்க நீங்கும் இப்படி-௩-நாள்கொடுக்கவும்.

7-ம்-மாதத்தில் வயற்றுநோய் காணுமாகில் குட்டிவிளாயிலையும் சந்தனம் கல்மாறுவெற்றிலை இம்மூன்றும் சமனிடையாய் யெடுத்தரைத்து பசுவின்பாலில்கொடுக்கவும் மூன்றுநாளும் காலையில்கொடுக்கவேண்டியது.

8-ம்- மாதத்தில் கைகால்கள் அசதியும் பலவீனமும் கொடுக்கும் பசியெடாது அல்லது அன்னத்தின்மீது பிரியமிராது இதற்குதாமறைப்பூவும் நெய்தற்கிழங்கும் சமயிடையாயெடுத் தரைத்து பசுவின்பாலில் கொடுக்கவும் இவ்வாறு-௩-நாள் கொடுக்கவும்.

9-ம்-மாதத்தில் நோய்காணும்மாகில் அரசன்பட்டை - மருதம்பட்டை இரண்டும் வெந்நீரில்அரைத்து பசுவின்பாலில்கலக்கி கொடுக்கவும் நிவர்த்தியாம் இப்படிமூன்றுநாள் கொடுக்கவும்.

10-ம்-மாதத்தில் கர்ப்பவதியின்வயர் அதிகவலிகாணுமாகில் நாட்டுசேர்க்கரையும்இலுப்பைப்பூவும் சமமாயெடுத்தரைத்துபாலில் கலக்கிக்கொடுக்கநீங்கும் யிப்படிமூன்றுநாள் கொடுக்கவும்.

———(-)———

(பத்துமாதங்களுக்கும் ஏகமூலித்தைலம்)

தாளிவேர் ஒருபிடி• விளக்கெண்ணை-க-வீசை - இந்தவிளக்கெண்ணையை அடுப்பில்வைத்து சிறுதீயாகயெரிக்கவும் அப்படியெரிக்கும்போது யெண்ணெயானது முக்கால்தரம் காய்ந்தபிறகு அதாவதுமுறியாமல் இளம்பதமாய்காய்ந்தபிறகு ஒருபிடிதாளிவேரைபோட்டு யெரிக்கவும் அப்படியெரித்து வரும்போது அந்த எண்ணெயில் போட்டிருக்கும் வேரில்ஒன்றையெடுத்து உடைத்தால் மளுக்கென்றுஉடையுமானால் அந்தபதத்தில் யிறக்கிவைத்துக்கொண்டு கெற்பஸ்திரீகளுக்கு - பிரதிமாதமும்- முதலில் மூன்றுநாள்-காலையில் இந்தயெண்ணெயில் ஒருகரண்டிகொடுத்து சற்றுநேரம்பொறுத்துபழையதுநீராகரத்துடன் கொடுக்கவேண்டியது - ௩-௪-விசைமலங்கழியும் வியாதிகள் ஒன்றும்அணுகாது பிறகுபிரக்கும் குழந்தைக்கும் மாந்தம்-கரப்பன்முதலான வியாதிகள்வராது பிள்ளையானது கரும்புபோல்வளரும்

———(*)———

{ பிள்ளை-வயற்றைவிட்டு வுதயமாகாமல் தடைப்பட்டால்மருந்து }

———(-)———

நிலக்குமிழிவேர் அரைத்து நீரில்கரைத்துகொடுத்தால் உடனே பிள்ளையுதயமாய்விடும்என்று அகஸ்தியமுனிவர் கூறிய பெருநூல் ஆயுள்வேதசெய்யுளின்படி இங்கனம் வசனரூபமாய் வரையப்பட்டதென்றறிக.

## கருக்குழியினிடமாய்உருதரிக்கும் விபரம்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆகநாள்விந்துவிட்ட ஐந்தாநாள்கிடுகுபோலாம்
போகமூவைந்தாநாளில் பொருந்தியமுட்டைபோலாம்
ஏகமாதத்தில்பிண்டம் இரண்டினில்முளிபுமட்டாம்
பாகமாய்மூன்றுமாதம் பகர்உந்திமட்டுமாமே. (௩)

மட்டுடன்நாலாந்திங்கள் வளர்ந்திடுங்காலிரண்டிற்
கட்டுடன் ஐந்தாமாதம் கருதுபூரணமதாறில்
தட்டுடன்யெலும்புசீவன் தலைமுயிர்நரம்புயேழில்
எட்டுடன்அறிவாமொன்ப தியல்தசம் பிறப்பதாமே. (௪)

---

வினா.

பிள்ளைபிறந்தவுடன்சீறியழுதால் விக்கல்பொருமல் - முக்கல்இவைகளுக்கும்ருந்தென்ன

விடை.

சிறுதேக்கு-திப்பிலி - இரண்டும்- வெய்யலில் நன்றாய்உலர்த்தி பொடியாயிடித்து வஸ்திரகாயம்செய்து- தேன்-அல்லது-பசும்நெய்யில் குழைத்து தாயின்கொங்கைக்காம்பில்தடவிஅக்குழந்தைக்குபால்கொடுத்தால் விக்கல்பொருமல் சிலவிஷம் முதலானதும்போம் அல்லது இன்னொருவிதம்அதாவதுதிப்பிலி ரோகணிஇரண்டுங்கூட்டி நுண்ணியபொடியாயிடித்து நெய்யில்குழைத்துஸ்தநத்தில்பூசி பிள்ளைக்குப்பால்கொடுத்தால் அப்பாலை யுண்ணும்.

குழந்தைக்கு வயறுவீங்கியிருந்தாலும் குடித்தபாலை கக்குதலும்நிவர்த்தியாகும்

## குடித்தபாலைகக்குதலும்கொட்டாவிக்கும் மருந்து.

வெள்ளைப்பூண்டுஓமம் இரண்டும் கியாழம்வைத்து ஒருமுணர்க்குடிப்பாட்டும் பட்சத்தில் மேற்கூறிய வியாதிகள் தீர்த்தி

யாகும். அல்லது அதிமதுரத்தை பொடியாகயிடித்து பாலிலஅ றைத்து தனத்தில்தடவிபாலுண்ணக் கொடுப்பதுநன்று

| வினா. | விடை |
|---|---|
| பிள்ளையினது வயறு நொந்தழுதால் அல்லது மலங்கட்டினால் அவிழ்த மென்ன | புன்னையிலை - சிறுதேக்கு - கோஷ்டம் இவை மூன்றும் சமயிடையெடுத்து நீர்விட்டறைத்து- அந்தபிள்ளையின் வயற்றில் தடவினால் அவ்வியாதி நிவர்த்தியாகும் -உ -அல்லது - ந-வேளைதடவவும். |

| வினா. | விடை |
|---|---|
| பிள்ளையின் அடிவயர்நொந்து மலங்கட்டினால்அவிழ்தமென்ன | வேப்பம்துளிரும் சக்கரையும்சமயிடையாயெடுத்தறைத்து-அப்பிள்ளைக்கு உள்ளுக்கு அருந்தச்செய்தால் நீங்கும்நீரிரங்காதிருந்தாலும் எலிப்புழுக்கை வெள்ளரிவிரைவண்ணார் வேஷ்டிகளுக்குயிடும்-பூநீலம்-இவைசமயிடையாயெடுத்துஅறைத்து அடிவயர்அல்லது வயர்முழுமையும் பூசினால்-வெகுசீக்கிரத்தில் நீரிரங்கும்- மேற்கூரிய மருந்தால்மலம் உதையும் |

———[௦]———

## மாந்தவகுப்பு.

வினா.

மாந்தம் எத்தன்மையால் வந்தணுகபபடடது.

விடை

பிள்ளையையீன்றதாய் அளவுமீறிய ஆகாரம் புசிப்பதினாலும் - கடலைவெல்லம் வாழைப்பழம்முதலான மந்தத்தைதரும் வஸ்துக்களை தின்று தன்வயர்மந்தப்பட்டிருக்குங் காலையில் பிள்

ளிகளுக்கு பால்கொடுப்பதினாலும் வெல்லம்தேங்காய்சில மாக்களினால் செய்யப்பட்ட உருண்டை வாளைமீன் வரால்கெண்டை கெளித்திமீன்யெருமைப்பால் யிறைச்சிபுளிமோர்-பாகல்காலகாய்வாழைக்காய் இவைகளை புசிக்க நேர்ந்தகாலமாயினும் விசேடித்தருந்தில் ஆங்கனமே மாந்தமென்பது அபேட்சித்துத் தட்டுமென்றறிக

——(*)——

வினா.

மாந்தமென்பது எத்தனைவகைப்பட்டது.

விடை

வாதமாந்தம்- பித்தமாந்தம் - சிலேட்டுமமாந்தம் - விஷமாந்தம்-பெரிமாந்தம்-வாலைமாந்தம்-சுரமாந்தம்-செரியாமாந்தம்-கட்டுமாந்தம்-பால்மாந்தம் - யெரியாமாந்தம் - [illegible]மாந்தம்-கணமாந்தம்-வலிப்புமாந்தம் - சுழிமாந்தம்-மூக்குமாந்தம்- ஜன்னிமாந்தம்-ஊதுமாந்தம் - வீக்கமாந்தம்-நீர்மாந்தம்- தலையாமாந்தம்-ஆக-மாந்தவகை-(உக) என்றறிக

——◇◇——

வினா.

வாதமாந்தகுணங்கள் எத்தன்மையாயிருக்கும்.

விடை.

குழந்தைகளுக்கு கால்கை குளிர்ந்திருக்கும் உதிரம்பொருமும் கண்களைத் திரந்தபடியாய் பார்த்தழும் தேகத்தில் வியர்வை சொரியும் ஒவ்வொருவேளை கைகால்கள் வலிப்புபோல் வலிக்கும் கோட்டாவிவிடும் தூங்காமல் துடிக்கும் நாசிதுவாரங்களில் புண்ணாகும் இவைகளை வாதமாந்தகுண மென்பார்கள்

——(*)——

வினா.

பித்தமாந்தகுணம் எத்தன்மைப்பட்டது.

விடை

வாந்தியாகும்-பேதியாகும்-மூர்ச்சையாயிருக்கும் சூரல்கம்மலாயிருக்கும் தேகம்மஞ்சள்நிறமாகும் வியர்வைவிடும் தேகம் வலிக்கும் குளிரினால்மயங்கும் இவைபித்தமாந்தகுணமென்பார்கள்.

வினா.

சிலேட்டுமமாந்தகுணம் எத்தன்மைப்பட்டது

விடை

அதிகவெப்பத்தினால் நலிவுண்டாகும் உடல்முழுதும் சிலு சிலிர்க்கும் நாவானது வெளுத்திருக்கும் நெஞ்சில் கோளமுகட்டும் வயிறு அடிக்கடிகழியும் மேல்மூச்சுவாங்கும் சுவாசம் அதிகரிக்கும் இந்தகுணங்களிருந்தால் சிலேட்டுமமாந்தமென்பார்கள்

———[*]———

வினா.

முன்கூறியமாந்தம் (உசி)-ல்-வாதமாந்தம் - பித்தமாந்தம் சிலேட்டுமமாந்தம் இவைமூன்றுகுணங்கள்நீங்க மற்றபதினெண் வகை மாந்தங்களுக்கும் குணங்களென்ன

(யஅ) மாந்தகுணங்களுக்கும்-விடை

செய்யுள்.

பிள்ளையும்கனத்திருக்கும் பிரண்டைபோல்காலும்பின்
உள்ளமுங்கண்சிவந்து உடம்பினில் வியாதிகாட்டும்
துள்ளியேயன்னமில்தங்காது டுக்கெனச்சுழற்றுமாகில்
கள்ளமாய்குரலுந்தாழ்ந்துகண்குவிழ்ந்திருந்தால்மாந்தம் (௫)

மாந்தத்தின்குணங்கள்கேளாய் வயறுபோம்வெதுப்புமாறும்
சோர்ந்திகைகால்குளிர்ந்து தோகையேபாலுண்ணாது
வாந்தியும்மிகவேபண்ணும் வாயுமேலுயர்ந்துசாயும்
மாந்தியேமயக்குமாகில் மாந்தத்தின்குணங்களாமே. (சு)

பழரோசிதமலமுடனே பலவாய்கழியும்பலவிதமாய்
தேகமுட்டப்பாலதுபோல் தெளிர்ந்தண்ணீராய்கழியும்
வாரேணவைப்போல்கழியும் வளமாயுள்ளங்கைகாலும்
நேரேகுளிர்ந்ததண்ணீர்போல் நெறிந்துகிடக்கும்கண்டீரே (எ)

பாரேவெதும்பும்கண்சுழலும் பனிபோல்தேகமிகவேர்க்கும்
பாரோமுகமும்பலவிதமாய் பளிங்குபோலேஒளிமின்னும்
பாரோயிந்தக்கூறதனை பருவமறிந்துகொண்டெல்லாம்
பாரோயிந்தக்குணங்காணில் பகர்வாய்மாந்தசேட்டையென்றே.()

வினா.

இப்பொழுதுகூறிய (உக) மாந்தங்களுக்கும் அவிழ்தமென்ன.

விடை.

மாந்தத்திற்கு பச்சிலைசாறு

நொச்சியிலை - பொடுதலையிலை - நுணாயிலை - உத்தாமணியிலை இந்நான்குவித யிலைகளும் ஒவ்வொருபிடியெடுத்து இடித்துசாறுபிழிந்து இரண்டுபாலடைசாறு உள்ளுக்குகொடுக்கமாந்தமென்பது ஊரைவிட்டோடுமென்றறிக.

தாய்பத்தியமிருக்கவேண்டியது-இச்சாபத்தியம்

வேறுவிதம்.

உத்தாமணியிலை-பேய்மிரட்டியிலை - சாணாக்கிலை-வெதுப்படக்கியிலை-வேளையிலை - நொச்சியிலை- இவைதினுசுக்கு ஒவ்வொருபிடியெடுத்து சட்டியிலிட்டு சொஞ்சம்வதைக்கி - யிடித்துசாறுபிழிந்துக்கொண்டு அத்துடன் வசம்பு-சிறுதேக்கு-ஆமையோடு-இம்மூன்றும் வகைக்கி-தட்டிடையாகயெடுத்து சற்றேவறுத்து பொடியாயிடித்து-ஷை-சாற்றில்கலந்து யிரண்டுபாலடைகொடுக்கவும் இப்படிமூன்றுநாளும் காலையில்கொடுக்க மாந்தம்போமென்றறிக=தாய்சுட்டபுளி வருக்தஉப்பு சேர்த்துகொள்ள வேண்டியது.

———[*[———

இன்னொருவிதம்.

ஒருபிடி பொடுதலையிலை காலணாயிடை கல்லுப்பு இரண்டையும் உரலிலிட்டுஇடித்து சாறுபிழிந்துசட்டியிலிட்டு அடுப்பேற்றிசிறுக எரித்துகொஞ்சம் சுண்டினபிறகு யிரக்கிகுழந்தைக்குகொடுக்கவும் இப்படி-ங-நாள் கொடுத்தால் மாந்தம்நிவர்த்தியாகும்-தாய்இச்சாபத்திய மிருக்கவும்

## மாந்தத்திற்கு குடிநீர்.

ஓமம் - சூண்டு-மிளகு - திப்பிலி-வகைக்கு (கால்பலம்) எடுத்து ஒன்றிரண்டாயிடித்து சீலையில்முடிந்து இரண்டுபடி தண்ணீரில்போட்டு அடுப்பிலேற்றி எட்டொன்ருய் வற்றக்காய்ச்சி இறக்கித்தெளிவாயிறுத்து உள்ளுக்கு இரண்டுவேளையும் மூன்று நான்கொடுக்க மாந்தம்நீங்குமென்றறிக இச்சாபத்தியம்

## மாந்தத்திற்கு வேறுமருந்து.

குட்டிவிளாயிலையை வதக்கி சார்பிழிந்துக்கொண்டு ஆமைபோடு வசம்பு இரண்டும்சுட்டு தூளாக்கி அதிற்கலந்து ஒன்று-அல்லது இரண்டுபாலடைவீதம்(௩) வேளைகொடுக்க மாந்தம்யாவும்நீங்கும்

## மாந்தத்திற்கு வேறுமருந்தும் மேற்பற்றும்.

உத்தாமணியிலை - குப்பைமேனியிலை- பொடுதலை-வேளையிலை - இண்டம்யிலை-அகத்தியிலை-இவைகளை ஒவ்வொருபிடியெடுத்து ஒன்ருய்வதக்கி சார்பிழிந்து-க-பாலடை கொடுக்கவும

ஓமம் வசம்பு-ஆமைபோடு-மூன்றும் சரியிடையாயெடுத்து சுட்டுஅரைத்து காலகைகளுக்குத் தடவவும் இச்சாபத்தியம்.

## மாந்தத்திற்கு வேறு கியாழம்.

வேளைவேர் சுக்குடனே வெந்தயமும் வெள்ளுள்ளி
பாளைசேர் ஓமம்பருவசம்பு வாள்விழியாய்
ஒன்ருகக்காச்சியுடன் குழவிக்கிய
கண்டாலுமாந்தம்போம் காண். (௬)

## மாந்தத்திற்கு வேறுவிதக் கியாழம்.

நுணாயிலை - நொச்சியிலை - உத்தாமணிக்கொடி இவைவகைக்கு-பிடியாக எடுத்து சட்டியிலிட்டு அடுப்பேற்றி கருகவறுத்து

(கால்படி) ஜலத்தில்கலக்கி அடுப்பேற்றி-நாலுக்கு-ஒருபங்காகச் சுண்டக்காய்ச்ச வேண்டியது ஆறுல்பித்துடன் ஓமம்-வசம்பு-சுக்கு - மிளகு - பொடுதலைக்காய் - திப்பிலி-இதுகள் தினுசுக்கு துட்டிடையாகவெடுத்து சட்டியில்போட்டுகொஞ்சம் நல்லெண்ணெவிட்டு சிவக்கவறுத்து ஒன்றிரண்டாய்தட்டி சீலையில்முடிந்து டுமேற்படி கியாழத்தில் போட்டுக்காய்ச்சி யிறக்கவேண்டியது காலை-மாலை-ஒவ்வொருபாலடையாக மூன்றுவேளை கொடுக்கவும் சுட்டபுளி வறுத்தஉப்பு கூட்டவேண்டியது சிறுகுழந்தையா யிருந்தால் தாயார்பத்தியமிருந்து பால்கொடுக்கவேண்டியது

---

## மாந்தத்திற்கு வேறுவிதக் கியாழம்.

உத்தாமணியிலை - வேளைவேர்-நொச்சியிலை- பொடுதலை-முருங்கையிலை-துணியிலை வேப்பம்பிர்க்கு - தினுசுக்குகொஞ்சம் போட்டு-அரைப்படி - ஜலம்விட்டு-சுக்கு-திப்பிலி-மிளகு-ஓமம் வகைக்கு துட்டிடையெடுத்து ஒன்றிரண்டாயிடித்துமேற்படிஜலத்தில்போட்டு யெட்டொன்றாய்காய்ச்சி யிறக்கிவேளைக்கிரண்டு பாலடைவீதம் மூன்றுநாள் ஆறுவேளைகொடுக்க மாந்தமென்பது போகும் கடுகுநல்லெண்ணை வாய்வானபதார்த்தங்கள் யாவும் தள்ளவும்

## மாந்தத்திற்கு வேறுவிதக் கியாழம்.

சுக்கு - மிளகு-திப்பிலி - ஓமம்-பூண்டுதிரிவகைக்கு (கால்பலம்) வீதமெடுத்து இடித்துசீலையில் முடிந்துஉழக்குஜலத்திலிட்டு அடுப்பேற்றி யெட்டொன்றாய்க்காச்சி குருவிரத்தம்போல்சிவக்கக்காய்ச்சி-க-பாலடைவீதம் காலைமாலைகொடுக்க மாந்தம்தீரும் தாயார் பத்தியமிருக்கவும்

—(*)—

## மாந்ததோஷத்திற்குவேறு

### சாறு.

முடக்கொத்தான்யிலை- ஈரவெங்காயம் இரண்டும் சரியிடை யாயெடுத்து நன்ருய்வேகும்படியாய் வெதுப்பி பிழிந்துமூன்று காசிடை உள்ளுக்குகொடுக்க மாந்ததோஷம் நீங்குமென்றறிக



## மாந்ததோஷம் வலிப்பு-மலக்கட்டுக்கு

### பச்சிலைச்சாறு.

வேளையிலை-கற்பூரவள்ளியிலை-வசம்பு சமனிடையா யெடுத்து இடித்து வெதுப்பிப்பிழிந்து குழந்தைவயதுக்கு தக்கினபடி கால் அரை முக்கால் - அல்லது - முழுபாலடையாக திடமரிந்து கொடுக்க மலம்உதையும் வலிப்புநிற்கும் தோஷங்கள் தீரும்இச் சாபத்தியம்.



## மாந்தத்தாற்காணும் வயருப்பலுக்கு

### மருந்து

ஓமம் - வசம்பு-யிரண்டும் - சமஇடையாயெடுத்து நன்ருய் வறுத்து பொடிசெய்துஉத்தாமணியிலையையிடித்து சார்பிழிந்து அந்தச்சாற்றில் ஷை. பொடியைபோட்டு குழப்பிகொஞ்சம் கொதிக்கவைத்து ஒருசங்குகொடுத்தால்மேற்படிவியாதிகள் யாவும் நீங்கும் இச்சாபத்தியம்.



## மாந்தஉப்பிசத்திற்கு

ஓமம் - இரண்டுகாசிடையெடுத்து சட்டியில் வறுத்து குப்பைமேனிவேர் பட்டை இரண்டுபலம் யெடுத்து யிடித்து (அரைப்படி)தண்ணீரில் ஒன்ருய்போட்டு எட்டுக்கொருபங்காய் வற்றக்காய்ச்சி உள்ளுக்குகொடுக்க மேற்கண்ட வியாதிநீங்கும்.



## மாந்தம் வயற்றுவலிவயர்ஊதல்

### இதுகளுக்கு மருந்து.

உத்தாமணியிலையையிடித்து - உழக்குசார்பிழிந்துக்கொண்டு அத்துடன்-சுக்கு-மிளகு - திப்பிலி-வசம்பு - கோரோசனை-வகைக்குஇரண்டு விராகனிடையாகஇடித்துவஸ்திரகாயம்செய்து உத்தாமணிகொழுந்து அறைத்து மூணுகாசியிடையும் ஷை சாற்றில்கலக்கி அடுப்பில்சற்று கொதிக்கக்காய்ச்சி யிறக்கி-க-பாலடைவீதம் கொடுத்துவர ஷை வியாதிகள்தீரும் இச்சாபத்தியம்

———(*)———

## மாந்தம்-கருங்கிரந்தி-அட்சரம்-கணங்கள்

### மேகவெட்டை இவைகளுக்கு

### எண்ணெய்

மணத்தக்காளியிலை - துளசியிலை துத்தியிலை - பிரமியிலை வில்வயிலை - வல்லாரையிலை - கையாந்தகரை-பொடுதலை- நுணயிலை-புங்கம்யிலை-இவைகள் சமமாயிடித்து-க-படிசாறு பிழிந்துக்கொண்டு - சுக்கு-கடுக்காய்-தான்றிக்காய் - திப்பிலி-ஆமையோடு-அறத்தை-ஓமம்- வசம்பு- கஸ்தூரிமஞ்சள் இதுகள்வகைக்கு அரைபலம் ஜாதிக்காய்-(க) இதுகளைநன்றாயிடித்து வஸ்திரகாயம் செய்து-க-படிவிளக்கெண்ணெயில் போட்டு-ஷை - சாறும்ஊற்றி மெழுகுபதமாய் காய்ச்சியிறக்கி யெண்ணெயையிறுத்துக்கொண்டு சிறுவர்களுக்கு-க-காண்டியும் பெரியவர்களுக்கு (உ)காண்டிவீதமாய் - எ-நாளைக்கி கொடுக்கவும்-பத்தியம் - சுட்டபுளிவறுத்தவுப்பு மறுபத்தியமும் அப்படியேகார்த்து விளக்கெண்ணைதேய்த்து தலைமுழுகவும் ஷை வியாதிகள்யாவும் தீரும்.

---

## ஊதுமாந்தகுணம்.

உடலெல்லாம் ஊதிக்காணும் வாந்தியும்கழிச்சலுண்டாம்
குடலெல்லாம் யிரைச்சலாகிக் கூப்பிடும் சமுத்திரம்போல்
தொடையெல்லாம் வலிக்கும்மிக்கச் சுரமுடன்கடுப்புமாகும்
அடவினல்ஊதுமாந்தம் அதுசெய்யும்குணமிதாமே. (ய)

## ஊதுமாந்தத்திற்கு

### குளிகை.

வெண்காரம் (க) பிடை-கடுகுரோகணி - யிரண்டும் இரண்டிடை-கருஞ்சீரகம்-இரண்டிடையாகவெடுத்து- வெண்காரத்தை நெருப்பில் பொரித்துக்கொண்டு - மற்ற மூன்றுதினுசும் -சட்டியில்யிளம் வறுப்பாய்வறுத்துக் கொண்டு-முலைப்பால்விட்டு யிரண்டுஜாமம்-மெழுக்குபோலரைத்துகுண்டுமணிப்பிரமாணம் மாத்திரை செய்துவைத்துக்கொண்டு - ஷி - ஊதுமாந்தத்திற்கு-உ-மாத்திரை யெடுத்து- முலைப்பாலில் - அல்லது-தேனில்கொடுக்கத்திரும்-ங - வேளைக்கொடுக்கவும் இச்சாபத்தியம் வாய்வான பதார்த்தங்களைத்தள்ளவும்.

———(*)———

## ஐந்து விதமாந்தத்திற்கு

### கியாழம்.

பொடுதலை-வேப்பந்துளிர்-புளியிலை- நுணாயிலை-உத்தாமணியிலை-நொச்சிலியிலை-இவைகள்சமனு யெடுத்திடித்து (கால்படி) ஜலம்விட்டு - ஓமம் - உள்ளி -திப்பிலி - வசைக்கி - இரண்டுகாசிடையெடுத்திடித்து அத்துடன்போட்டு எட்டுக்கொன்றாய் காச்சிபிரக்கி காலையில்-ஒருபாலடைவார்க்க-தீரும்வியாதிகளாவன ஊதுமாந்தம் - போர்மாந்தம் - சத்திமாந்தம்-செரியாமாந்தம்-கட்டுமாந்தம்-இதுகள்தீரும்.

———(-)———

## நீர்மாந்த குணம்-அல்லது

### ஜலமாந்தகுணம்.

### அறுசீரடி-ஆசிரியவிருத்தம்.

களிர்ந்துகுளிரும் சிலிர்த்துவரும்-நாவில்நீரும் ஒக்காளம்
கழிந்துவயருமிகப்பொருமும் கைகால்மெய்யுந்தினவெடுக்கும்
மெலிந்துஉப்புமிகப்பருக்கும் மெதுவாய்ப்பேசும் உரக்கமதாய்
தெளிந்துசிரிக்கும்நீர்மாந்தம் செய்யுங்குணங்களிதுதானே.(யக)

இன்னம்.

தலைநோய் காணும்-முகம் மினுமினுக்கும்-மலஞ்சிறுகும் பாலைஉண்ணது உடம்பெல்லாம் குளிரும்-மூத்திரதுவாரம் கடுக்கும்-இதற்குநீர்மாந்த மென்றுபெயர்

———(-)———

நீர்மாந்தத்திற்கு

மருந்து

நொச்சியிலை-வேளையிலை-குப்பைமேனியிலை-துணியிலை-பேய் மிரட்டியிலை-தும்பையிலை-வகைக்கி ஒருபிடியாய் கொண்டுவந்து-சட்டியில் வெதுப்பிசாரபிழிந்து - மிளகு-பூண்டு-வசம்பு ஓமம் - இதுகள் - ஒவ்வொரு காசுக்குவாங்கி - மேற்படிசார்விட்டறைத்து அதில்கலக்கி-காச்சி - குழந்தைக்குதக்கினபடி-கால்-அறை-முக்கால்-அல்லது-முழுப்பாலடையாகக் கொடுக்க-ஷைமாந்தகுணங்களை கண்டிக்கும்- இச்சாபத்தியம்.

———(*)———

நீர்மாந்தத்திற்கு

வேறுவிதக் கியாழம்

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

மாந்தம் போகக்கருநீலி மதத்தம் செவியம் கியாழமிட
வாய்ந்தநோயாய்நீர்மாந்தம் வணங்கிபோடும்பண்டி[illegible] ழி
தோய்ந்தயிதுதான்பொய்யாதுதொல்லுலகோர்க்குசொன்னமொ
ஏந்திழையீரின்னூல்போலே யெவரும்சொல்லாரறிவீரே. (௰௨)

நீர்மாந்தத்திற்குவேறு

எண்ணெய்

வெதுப்படக்கி - சிற்றம்மான் பச்சரிசி-பீனரி-துணசாணைக்கிலை - வகைக்கி-கால்படி சார்பிழிந்துக்கொண்டு - விளக்கெண்ணெய்-கால்படி கூடவிட்டு-வசம்பு - பூண்டுதிரி-மஞ்சள்-வகைக்கி-உ-பலம்பிடித்துப்போட்டு கடுகுபதமாய்காய்ச்சி - காலையில்-க-கரண்டிவீதம்-மூன்றுநாள் கொடுக்க நீர்மாந்தம்நீங்கும்-கூட்டபுளிவறுத்தவுப்பு கூட்டவும்

## நீர்மாந்தத்திற்குவேறுவித
## எண்ணெய்

ஜனகிபூண்டு பேய்மிரட்டியிலை - பெருமுட்டைப்பீனாரி-நு ணாயிலை - இவைகளை சமனாய்கொண்டுவந்திடித்து (எட்டுபலம்) சார்பிழிந்துக்கொண்டு (எட்டுபலம்) விளக்கெண்ணைகூட்டி கஸ் தூரிமஞ்சள் - வசம்பு-வெள்ளைப்பூண்டு-வகைக்கு அரைக்கால் பலம் யெடுத்திடித்து அதிற்கலந்து மெழுகுபதமாய்காச்சி - வே ளைக்கு-இரண்டுகாசிடையாக மூன்றுநாள்கொடுக்க நீங்கும்சுட்ட புளி வறுத்தவுப்பு கூட்டவும்

---

## நீர்மாந்தத்திற்கு வேறுவித
## எண்ணெய்

பத்துபலம் -சித்தாமணக்கெண்ணெய்-பூரம் - ஒருராவிகனி டை-சுத்திசெய்தவாளம்-இரண்டுவிராகனிடை - வெள்ளைமிளகு இரண்டுவிராகனிடை லவுங்கம்-இரண்டுவிராகநிடை - இதுகளை கலவத்திலிட்டு ஷை-யெண்ணைவிட்டு நன்றாய்மைபோலரைத்து- சித்தாமணக்கெண்ணையில கலந்துஒருநாள சூரியபுடம்வைத்தெ டுத்துக்கொண்டு - காலையில்-ஒருகரண்டிவீதம் மூன்றுநாள்கொ டுக்க-நீர்மாந்ததோஷங்கள்யாவும் தீரும் துவரைபொரிச்சாறு-அ ல்லதுமிளகு நீர்சாதம உண்ணவேண்டியது.

---

## விஷமாந்தகுணம்.

சிறியவன்வயரிறைந்து சினத்திடும்உருட்டிப்பார்க்கும்
கருவுடன்பெற்றதாயார் கையினில்தங்கிடாது
அறிவுள்ளமேனிவாடி அறையின்கீழ்குளிர்ந்திருக்கும்
வெரியென்வெருவும்வேர்க்கும் விஷமென்றமாந்தம்தானே. ()

வாந்தியும்வயறுபோகும் வாகுசேர்விழியும்சோறும்
மாந்தியேசோர்ந்துவீழ்ந்து வயற்றினில்வலியுண்டாகும்
சேர்ந்திடும்மலமுந்தானும் சிக்கிணபடியாய்போகும்
ஆய்ந்திடும்நூல்வல்லோரே அதுவிஷமாந்தமாமே. (௰௪)

சீறிஅலைபோல் வயறிரையும் சிரக்கப்பார்க்கும் கண்சொருகும்
பாரியவயற்றுநோயாலே பரக்கும் பிள்ளையோய்ந்திருக்கும்
ஆரிஆரிசுரங்காணும் அடுத்துவாந்திவயறேடும்
தேரீர் இதுவிஷமாந்தமென்று சொன்னாருலகில்பண்டிதரே. ()

## விஷமாந்தத்திற்கு

## கியாழம்.

ஓமம் - பொடுதலை-மஞ்சணத்திமூலி - நொச்சியிலை - வேளை வேர் - வெள்ளைப்பூண்டுதிரி - இவைகளை சமனிடையாயெடுத்து நறுக்கிவறுத்து (கால்படி) ஜலம்வைத்து-நாலுக்கொன்றாய் வற்ற க்காச்சி யிரக்கி - உள்ளுக்கு கொடுக்க மூன்று வேளையில் தீரும் இச்சாபத்தியம்.

## போர்மாந்தகுணம்.

வயர் விம்மிவிம்மி பேதியாகும் - மார்பில்துடிக்கும்-தலையுசைக்கும்-வயற்றுநோய்காணும் - இருமல்காணும் நெற்றி நரம்பு உயர்ந்திருக்கும் - கண்ணைமலர்ந்து மலர்ந்து மூடும்-பாலுண்ணாது - தாகம் மிகவெடுக்கும்- விலாவெலும்பு- முதுகெலும்புதெரியும் - மலம்விசேஷமாய் போகும் - இதுகள்விஷமாந்த மென்றறிக.

## போர்மாந்தத்திற்கு

## மருந்து.

ஒருபிடி ஓமத்தை எடுத்து யிளவறுப்பாகவறுத்து தூளாக்கிவைத்துக்கொண்டு - வெந்நீர் அல்லது முலைப்பாலில் மூன்றுசிட்டிக்கை போட்டுகலக்கி - ஒவ்வொருபாலடையாகக் காலைமாலை மூன்றுநாள் கொடுக்கவும்.

## போர்மாந்தத்திற்கு வேறுவித

## மருந்து.

ஒருபிடி உப்புசிருகவறுத்து எடுத்துக்கொண்டு அந்தசட்டியில்தானே-வெற்றிலை-உத்தாமணியிலை- தும்பையிலை-மூன்றுஞ்சமனுய்சேர்த்து இரண்டுபிடியெடுத்து சட்டியிலிட்டு வெதுப்பி கால்படி ஜலம்விட்டு ஆமையோடு - வசம்பு இரண்டும் கொஞ்சகொஞ்சம் எடுத்துசுட்டு பொடியாய்தட்டி அதிற்போட்டு வறுத்தஉப்பும் போட்டு-நாலுக்கொன்ருய் காச்சியிரக்கி இரண்டுபாலடைகொடுக்க போர்மாந்தம் நீங்கும்.

## போர்மாந்தத்திற்குவேறுவித

## மருந்து.

ஆமையோடு - வசம்பு-ஓமம்-நுணாயிலை- உத்தாமணி-பொடுதலை-வெற்றிலைக்காம்பு - கிராம்பு-இவைகளை ஒர்நிறையாயெடுத்து சட்டியிலிட்டுக்கருக்கி கியாழம்வைத்து வேளைக்கு ஒருபாலடையாக மூன்றுநாள்கொடுக்க நிவர்த்தியாகும்.

## போர்மாந்தத்திற்கும்

## வாந்திக்கும்

## மருந்து.

வசம்பும் - மயிலிறகும் சாம்பலாக்கி முலைப்பால் வார்த்திழைத்து தேன்யிரண்டுதுளி விட்டிழைத்து சீரகமும் கிராம்பும் சாம்பலாக்கி யிரண்டுசிட்டிக்கை போட்டு வேப்பம்விரையை பொடியாய்நசுக்கி ஒருசிட்டிக்கைதூவி யிழைத்துகொடுக்கவும் உடனேநிவர்த்தியாகும்.

———(-)———

போர்மாந்தத்திற்கு

வேறுவித

எண்ணெய்.



காட்டுமல்லிகை - வெள்ளைப்பூண்டு - கருஞ்சீரகம்-கடுக்காய்-கடுகு ரோகணி - ஓரிடையாயெடுத்து இடித்து வஸ்திரகாயம் செய்து - பிரண்டைசார்பிழிந்து - சரியிடையாய்விளக்கெண்ணை விட்டு- ஷை தூளிட்டுகாய்ச்சிவடித்து - சிறுகரண்டிவீதம் காலையில்கொடுத்துவரவும் இச்சாபத்தியம்.

## பால்மாந்தகுணம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.



கண்ணுங்குழியும் செவிதாழும் கருத்துமயங்கி
கோழையுண்டாம்
புண்போல்வயிறுந்தானொந்து புளித்தேகழியும்
வயறூதும்
பண்ணார்மொழியும் பால்மாந்தம்பாரில்இன்னோய்
தீரவென்றால்
அன்னாள்ஆவின்நெய்தனிலே அன்பாய்வைக்கும்
திறஞ்சொல்வோம். (யக)



## இதுவுமது.

பாலதையெடுக்கும் பாலதைக்கழியும்
பரதவித்திடும் பலவிதமாய்
சாலவேகைகால் வெதுப்பிடுங்குளிரும்
தலையெடுத்திடாமலே மயங்கும்



சிலமாய்தாயார் லங்கணமிருந்து
திகழ்பொடுதலே காய்வறுத்து
கோலஇந்துப்புவசம்புள்ளி மிளகு
கொள்சமன் கொடுத்திடகுணமே. (௰எ)

## இதன்விபரம்.

பால்மாந்தத்தின்குணம் யெவ்விதமென்றால் கண்குழியும்-செவிதாழும் - புத்திமயக்கம் கொடுக்கும் - நெஞ்சில் கோழைகட்டும் வயிறு - நாய் கவ்வுதல்போல் வலியெடுக்கும் - புளிப்பாய் கழியும்-வயிறு உப்பிசம்கொடுக்கும் - அல்லது-குடித்தபால்-பாலாகவேகழியும் - பாலாகவேவாந்தியெடுக்கும்- கையில்தங்காமல் பரதவிக்கும்-கால்கை வெதுப்பும் இத்தன்மையுள்ள குணங்கள்காணில் பால்மாந்தமென்பர்.

## இதற்கவிழ்தம்.

தாயார் - லங்கணமிருந்து - அல்லதுகடும்பத்தியங் கார்ப்பதுடன் பொடுதலேக்காய் ஒருபிடி கொண்டுவந்து கருகவறுத்து-வசம்பு - வெள்ளேப்பூண்டு-மிளகு-இளம்வறுப்பாய்வறுத்து-யாவும்கலந்து பொடித்துவஸ்திரகாயம்செய்து இந்துப்புசமன்கூட்டி - முலேப்பாலில்-(௩)-சிட்டிக்கைபோட்டு (௧) பாலடைவீதம் கொடுத்துவர நிவர்த்தியாகும்.

## செரியாமாந்தகுணம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

——(*)——

மிக்கக்காய்ச்சல்தலேவலியும் மிகவேவயிறுநொந்தழுகும்
தக்கமலமாய்கரைத்தாற்போல் சாலக்கழியும்அறைக்கண்ணும்
தொக்கப்பக்கமாய்படுக்கும் சோரும்கீரைத்தண்டதுபோல்
சிக்கென்றிலங்குமுகமாதே செரியாமாந்தகுணமிதுவே. (௰அ)

## செரியமாந்தத்திற்கு

## மருந்து



வசம்பு - சடாமாஞ்சில் - வெள்ளைப்பூண்டு-சுக்கு- திப்பிலி- மிளகு - ஓமம்-கருஞ்சீரகம் ஆமையோடு-இவை ஓரிடையாவெ டுத்து யிடிதது மெல்லிய தூளாய்செய்து ஜலத்திலிட்டுகியாழமா ய்காச்சி கொடுத்துவர நிவர்த்தியாகும்.



## செரியாமாந்தத்திற்கு

## வேறுமருந்து.

ஒருபிடி - வேலிப்பருத்தியிலையைவெதுப்பி - சார்பிழிந்து- வசம்பு-வெள்ளைப்பூண்டு - மிளகு-மூன்றும் சமயிடையெடுத்து அறைத்து இலந்தைக்காய் பிரமாணம் - ஷை - சாற்றில்போட்டு கெச்சக்காய்பிரமாணம் பசும்நெய்யும்போட்டு கலந்துகொடுக்க நிவர்த்தியாகும் இப்படி - ௩-நாள் கொடுக்கவும் இச்சாபத்தியம்

## செரியாமாந்தத்திற்கு

## வேறுவிதமருந்து.



ஓமம் - கோஷ்ட்டம்-கோரைக்கிழங்கு - வசம்பு- இன்னுன் கும் சமஇடையாயெடுத்து - சட்டியிலிட்டு கருக்கவறுத்து பொ டித்து கியாழமிட்டுக்கொடுக்க - கழிச்சல்- உப்பல்-வலிப்பு - செ ரியாமையாவுந்தீரும்.



# கட்டுமாந்தகுணம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

தாயார்முலையில்வாய்வைத்து சற்றேயுண்ணும்திகைத்திருக்கும்
ஓயாதழுகும்சிற்றிருமல் உள்ளேசுரமும் மிகவுண்டாம்
சேயாமலமும்ஜலங்கட்டி சிக்கப்பண்ணும்பசியில்லை
மாயாமயக்கும்இதைகட்டு மாந்தமென்றுவகுத்தனரே. (௧௬)

இதுவுமது

எண்சீரடி

கொட்டாவிதலைநோயும் மலம்போகாமல்
குறுவேர்வைவயற்றுவலி குடலிரைச்சல்
தொட்டாலும் உடலெங்கும் கனல்போல்காயும்
தூக்கமதுபோலிருக்கும் சோர்ந்துமாந்தி
பட்டாலேவயிறுமிகக் கழிந்திடாமல்
பலநாளும்இப்படியே மலச்சிக்குண்டாம்
மட்டாருங்குழல்மடவீர் கட்டுமாந்தம்
வகையறியும் வாகடநூல்வகுத்தார்காணே. (உ௰)

—(*)—

கட்டுமாந்தத்திற்கு

கியாழம்.

சிந்தில்தண்டு-களிப்பாக்கு- சிவதைவேர் - கடுக்காய்-சுக்கு-ரோகணி - இவைசமமாய் யெடுத்து யிடித்து கியாழம்வைத்து எட்டொன்றாய் - குறுகக்காய்ச்சி - வடிக்கட்டி (க) பாலடைவீதம் கொடுத்துவர நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்

## கட்டுமாந்தத்திற்கு

## எண்ணெய்.

——(*)——

சித்தாமணக்கெண்ணை - (கால்படி) - அகத்தி-துளசி - தகரை-கழற்கொடி - நொச்சில்-செம்முள்ளி-மணத்தக்காளி இவைகள் சமமாயெடுத்திடித்து (கால்படி) சார்பிழிந்து யெண்ணையுடன் கலந்துக்கொண்டு கடுகு ரோகணி-கடுக்காய் - சீரகம் - கருஞ்சீரகம் - வெங்காயம் - வெள்ளைப்பூண்டு-வசம்பு - பூதகரப்பான் பட்டை - சார்வேளை-இவைகள் வகைக்கு-(௩)-விராகனிடையாக யெடுத்திடித்து வஸ்திரகாயம்செய்து ஷை எண்ணெயில்போட்டு - சதுரக்கள்ளிப்பால் - ஒருகரண்டிகூட்டி காச்சிவடித்துக் கொண்டு - பிள்ளைகளுக்கு ஒருதுட்டிடைவீதம் காலையில் கொடுத்துவரவும் நிவர்த்தியாகும் - அந்தியில் - மிளகு-சாம்பலாக்கி சுக்குநறுக்கிபோட்டு கியாழமிட்டு கொடுக்கவும் - கடும்பத்தியம் ௩-ரு-எ-நாள் கொடுக்கவும்.

## கட்டுமாந்தத்திற்கு

## வேறுவித எண்ணெய்.

சதுரக்கள்ளிப்பால் - உழக்கு - வெள்ளாட்டுப்பால் - உழக்கு ஆமணக்கெண்ணை-உழக்கு இம்மூன்றும் கூட்டிக்கொண்டு கடுக்காய-தான்றிக்காய் - நெல்லிக்காய்- வெள்ளைப்பூண்டு-இவைவிரண்டு விருகனிடையாகயெடுத்து பொடித்துப்போட்டு காச்சி வடித்துக்கொண்டு - ஒருகாசிடையெடுத்து மூலைப்பாலில் கொடுக்கவும் - ஷை - கட்டுமாந்தத்தினாலுண்டான சர்வதோஷமும் போகும் - கடும்பத்தியம்-அந்தியில் - மிளகுசாம்பலாக்கி-சுக்கு சுட்டுப்போட்டு கியாழம்வைத்து - ஒருபாலடை கொடுக்கவும்.

# தலைமாந்தகுணம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.



கைகால்குளிரும் வயர்போருமி
கனக்கப்பார்வை யுண்டாகி
மெய்தான்வேர்வை முகத்திலெழும்
விரைந்தேவசிக்கும் பலவிதமாய்
பொய்யேபபங்கொட் டாவியுடன்
புண்போல் நாசிநீர்வடியும்
மைசேர்விழியாய் தலைமாந்தம்
வந்தகுணமிது கண்டாயே. (௨௧)

இதுவுமது



தலையுங்கனத்துஉடலூர்தி சரீரந்தனிலேவலியுண்டாம்
குலையும்வலித்துத்துள்ளியழும் குளிரும்சுரமும்வேர்வைவிடும்
சிலையின்புருவத்தலைபிரா சேஷ்டைமிகவேசெய்விக்கும்
மலையினுயர்ந்தகரத்தானே வாதைப்படுத்தும்தலைமாந்தம். (௨௨)

## தலைமாந்தத்திற்கு மருந்து.

—(*)—

வெதுப்படைக்கி-பேய்மிரட்டி-தும்பை-உத்தாமணி-வெள்ளறுகு - வெள்ளுள்ளி - சதகுப்பி- தேசாவரம்-வசம்பு இதுகள் நிறைபாயெடுத்து யிடித்து கியாழம்செய்து உள்ளுக்கு கொடுக்கவும் இதை மேலுக்குப் பூசினாலும் வலிப்பு முதலானதும் குணமாகும்-இதற்குப்பின்வரும் ஏலாதிமாத்திரையை இந்தக்கியாழத்தில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க மிகவும் நன்று.

——(*)——

## துலமாந்தகுணம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

அடக்கிடாபெருகும்வாந்தி அதிகமாய்சுரமுந்தோன்றும்
முடக்கிடாமுகங்கடுப்பாய் மூரிகோட்டாவியுண்டாம்
விடுக்குமேவலிப்பெடுக்கும் விரைவிரைத்திருக்கும்வேர்க்கும்
அடக்கிடாதுலமாந்தத்தை அரிந்துநீர்அடக்குவீரே. (உக)

——[*]——

துலமாந்தத்திற்கு

கியாழம்.



ஈசுரமூலி - ஒருபிடி- சித்தாமணக்குகொட்டை - ஒருபிடி- கிலிகிலிப்பையிலை - ஒருபிடி - சின்னியிலை-ஒருபிடி - கடுக்காய்- மாசிக்காய் - ஜாதிபத்திரி - பற்பாடகம் - முத்தக்காசு-திரிபாலை- அதிவிடையம் - ஊசிப்பாலை - நீலியிலை - போஸ்தககாய் - தாளிசப்பத்திரி - கரிவேப்பிலை - சித்தாமுட்டி- இவைகள்வகைக்கி-(க) விராகனிடையெடுத்து கருக்கி-தூளாயிடித்து - பிள்ளைகள்சிறுநீர் (கால்படி) ஆத்துஜலம் (இரண்டுபடி) யாவும் வொன்ருய் கலக்கி அடுப்பேற்றி எட்டொன்ருய் வற்றக்காச்சி யிறக்கிவடித்துக்கொண்டுஒருபாலடைகியாழத்திற்கு-வயிரவமாத்திரை-ஒன்றுஇழைத்துகொடுக்க நிவர்த்தியாகும். வயிரவமாத்திரை பின்னால்வரும். பத்தியம் சுட்டபுளி வறுத்தஉப்பு கூட்டவும்.

---

துலமாந்தத்திற்கு விரோசனமும்

மருந்தும்.



வெள்ளைக்காக்கணன் வேரை அரைத்து பாக்களவு எடுத்து முலைப்பாலில் கலந்துகொடுக்க பேதியாகும் - பிறகு-அதாவது இரண்டாநாள்-(கால்படி) விளக்கெண்ணெயில் - வசம்பு-வெளை-

முடக்கொத்தான் - திரிபாலை-திரிகடுகு - அழிஞ்சில் இவைகள் வகைக்கு (உ௦) விராகனிடையெடுத்து யிடித்து யெண்ணையில் போட்டுகாச்சி காலையில் இரண்டுகாசிடைகொடுக்க துலைமாந்த குணம்யாவும் நிவர்த்தியாகும்

———(*)———

## சுழிமாந்தகுணம்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்.

துரப்புமிகும் கக்கலுடன் சுவாசம்தோற்றும்
தூக்கமது பிடியாது தொங்கிக்காயும்
இறப்பெடுத்து விக்கலுடன் விலாவிற்பள்ளம்
ஏந்துகொங்கைக்குடியாது வீங்கினாற்போல்
வெறுப்பார்கள் சிறுவர்மேல்யினி யேதென்பார்
வேறேநீ மனந்தளர வேண்டாம்சொன்னேன்
உறப்பான குணங்களிது தானுங்கண்டால்
ஓ ஓ ஓ சுழிமாந்தமென்றுசொல்லே. (உ௪)

———(*)———

## சுழிமாந்தத்திற்கு எண்ணெய்.

கொடாச்சிலை-துளசி -ஆடாதொடையிலை-மூதியார்கூந்தல் சங்கிலை - சிந்தில்-நெய்சிட்டியிலை - தாளியிலை-வகைக்கி-ஒருபிடியெடுத்து இடித்து (கால்படிசாறு) பிழிந்துக்கொண்டு அத்துடன் (கால்படி) விளக்கெண்ணைசேர்த்து ஜாதிக்காய்-ஜாதிபத்திரி-காயம்-கடுகுரோகணி - கோரோசனை-வெள்ளைப்பூண்டு - வகைக்கு -(௧௦)- விராகனிடையெடுத்து - வெதுப்பியிடித்து வஸ்திகாயம்செய்து ஷை யெண்ணையுடன்கலந்து காச்சிமுரியாமல் மெழுகுபதமாயிரக்கி- காசிடைநாக்கில் தடவிவர சுழிமாந்தம் நிவர்த்தியாகும் சுட்டபுளி-வறுத்தவுப்பு-கூட்டவும்.

———(*)———

## வீக்கமாந்தகுணம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

தப்புருவீக்கமாந்தம் தன்னையேபன்னக்கேளு
கப்புருகாதுங்கண்ணுங் கனக்கவேவீங்கும்வற்றும்
ஒப்புருகாவும்புண்ணாய் ஓய்விலாச்சுரமுண்டாகும்
வெப்புருகைகால்சோரும் வெருத்திடும்அன்னந்தானே. (உ௫)

### மாந்தவீக்கம்-விஷவீக்கம்-சுரம் நீர்கட்டுக்குமலக்கட்டுக்கு மருந்து.

பூவரசம்பழுப்பு சங்கம்பட்டை சீந்திற்கொடி துளசி-சுக்கு வரமுள்ளி - முருங்கையீர்க்கு - நீர்முள்ளி-சார்வேளையின்வேர்-பிரமியிலை - மருள்கிழங்கு-தூதுவளை - சிறுகுறிஞ்சான் - சத்திசாரணைவேர் கருஞ்சீரகம் - இவைசமனெடுத்து கியாழம்வைத்து எட்டொன்றாய்காச்சி யிறுத்துகொடுக்க - மாந்தவீக்கம்-விஷவீக்கம் - விஷபாகவீக்கம் மீறுசுரம் - நீர்கட்டுமலக்கட்டு இவையாவும்நீங்கும் இந்தகியாழம் சிறியவர்க்கும் பெரியவர்க்கும் ஆகும்.

[*]

## முக்குமாந்தகுணம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அதிவாமுக்குமாந்தகுணம் அறையக்கேளுந்திருக்கறவே
நிதமுங்குழவிமுக்கிமுக்கி நின்றேசுழியும் சீழ்மலமும்
புதியசுரமும்மேலாடி பிள்ளைகால்வீங்கும் உழலையுமாய்
சதைதோல்எலும்புாரம்பிருக்க தழலாயுலர்த்தியுருக்கிடுமே. ()

(*)

## முக்குமாந்தத்திற்கு

## கியாழம்.

ஓமம்-திப்பிலி - மிளகு-சூண்டு - ஆமையோடு-இவைசமனு மெடுத்து - ஒன்றிரண்டாய்தட்டி சீலையில்முடிந்து-(ஒருபிடி)ஜலத்திலிட்டு - எட்டொன்றாய் காச்சி-உ - பாலடைவீதம் கொடுக்கவும் அதில்முடிந்திட்ட மருந்தையெடுத்து அரைத்துவைத்துக் கொண்டு இலந்தக்காய்பிரமாணமாக ஷை கியாழம் கொடுத்தவுடன் அம்மருந்தைகொடுக்கவும் சகலமாந்தசேட்டையும் நிவர்த்தியாகும் இந்தமுக்குமாந்தத்திற்கு பின்வரும்கஸ்தூரியெண்ணை கொடுத்தால் மிகவும்நன்று.

## வரள்மாந்தகுணம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தோலுந்திரங்கியுடல்வெளுக்கும் சுழலும்ஏக்கமுண்டாகும்
பாலுங்குடிக்குமெய்யிளைக்கும் பார்க்கும்போதுபலகுணமாம்
காலுங்கையுந்தான்வற்றி கடுப்பும்வலிப்பும்காண்பித்து
வாலர்தன்னையுருவழிக்கும் வரள்மாந்தத்தின்குணமாமே. (உஎ)

## வரள்மாந்தத்திற்கு

## குளிர்ச்சியெண்ணெ.

ஆடுதின்னாப்பாளை - சாறுவேளை - மணித்தக்காளி-கழற்சி- கரிசாலை - துளசி-அவுரி - இவைகளின்யிலைகளை சமமாயெடுத்துஇடித்து ஆழாக்கு சார்பிழிந்து பசும்நெய் ஆழாக்குவிட்டுகலந்துவைத்துக்கொண்டு கஸ்தூரிமஞ்சள் - கோஷ்டம்-கருஞ்சீரகம்-கடுகுரோகணி - வகைக்கு (௰) விருகனிடையெடுத்திடித்து

வஸ்திரகாயம்செய்து முன்கலக்கியநெய்யுடன் பேரட்டு துழாவி அடுப்பேற்றி மெழுகுபதமாய் காச்சி வடித்து சாயந்திரவேளை மாத்திரம் துட்டிடைபிரமாணம் கொடுக்கவும் இச்சாபத்தியமாக நெய்-தயிர்-பால்-இதுகள் கூட்டவும் பிள்ளைக்கு சகலதோஷமும் நீங்கிநன்ருய் இரத்தம்பரவிஉடம்பு-தணிந்துகாந்தியாகவும் புஷ்டியாகவும் வளரும்.

## உப்பல்மாந்தத்திற்கு

## மருந்து.

குப்பைமேனியும் - உப்பும் - சமவிடையாயெடுத்து இடித்துசார்பிழிந்து ஒருகாசிடை உள்ளுக்கு கொடுக்கவும்.

அல்லது.

மூக்காவேளை-சுக்கு - ஓமம்-வறுத்து சமயிடையெடுத்து வஸ்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு-வெந்நீர்அல்லது முலைப்பாலில் உ-ங - சிட்டிக்கைபோட்டு குலிக்கிவார்க்கவும் நிவர்த்தியாகும்.

## துட்டுமாந்தம்கிருமி-சுழிகணம்-காச்சல் நளிர்மாந்தம்-புரளி-இதுகட்கு

## எண்ணெய்.

வேகவைத்து இறுத்தஆமணக்கெண்ணை ஒருபடி தகரையிலையின்சாறு ஒருபடி இவ்விரண்டும் கலந்துவைத்துக் கொண்டு உடனே நாயுருவிவேர் - தைவேளை - நாய்வேளைவேர் - கொள்ளுக்காய் வேளைவேர் - சாரணையின்வேர் - இவைகள்தினுசுக்கு பெலிமிச்சங்காயளவு அரைத்து ஷெ கலந்தயெண்ணையிலிட்டு கலக்

சுக்கொண்டு - வசம்பு-ஓமம்-கஸ்தூரிமஞ்சள் - இவைவகைக்கு (௬) பலமும் - வாய்விளங்கம் - (௪) - பலமும் - வெள்ளைப்பூண்டு (௨) பலமும்- கருஞ்சீரகம்-வெந்தயம் - கடுகுரோகணி-இதுகள்-வகைக்கு - (௧) - பலமும் இந்தநிறைப்படியாக எடுத்திடித்துவஸ்திரகாயம்செய்து ஜலம்விட்டரைத்து ஷை - மருந்தில் கலந்து-அடுப்பேற்றி மெழுகுபதமாய்காச்சி வடித்துக்கொண்டு-பிள்ளைகள்திடத்துக்கு தக்கினபடி காசிடை-௨-காசிடை- அல்லது-(௬) கரண்டி அல்லது (௧) கரண்டி இவ்விதமாய் கொடுத்து - தாயார்க்கும் பிள்ளைக்கும்-உப்பு-புளி-கைப்பு-முதலானதும் நீக்கி கடும்பத்தியம்வைக்க மேற்கூறிய வியாதிகள்யாவும் தீரும்.

## உ ஸா மா ந் த கு ண ம்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்.

வஞ்சியேகருவாலே அரிந்துப்பாரு
வண்மையுடன்வாயுகந்து குடலைப்பற்றி
மிஞ்சியேமலஞ்சிக்கி கருகியேதான்
மிகுந்தசலம்மலமிரண்டும் கட்டிக்கொண்டு
அஞ்சியேஅலரியழும் தேம்பித்தேம்பி
அன்னையையுமிகபரிவாய் தேடும்தேடும்
ஒஞ்சிப்பால்குடியாது மிரண்டுபார்க்கும்
உஸாமாந்தகுணமிதென்று உணர்ந்துகொள்ளே. (௨அ)

உஸாமாந்தத்திற்கு

எண்ணெய்.

விளக்கெண்ணை- அரைப்படியில்-பூணகம் - வசம்பு-யெலிமிச்சம்வேர் - பூண்டுதிரி-வெங்காயம் - பெருங்காயம் - வகைக்கு-

(கவ) விராகனிடையாக வெடுத்துஇடித்து எண்ணெயில்போட்டு மெழுகுபதமாய்காச்சி வடித்து - காசிடையாக உள்ளுக்குகொடுத்துவர. - உளமாந்தம்நீங்கும்.

## உளமாந்தத்திற்கு வேறுவித கியாழம்.



சங்கம்வேர் - கொடிவேலியென்னும் சித்திரைமூலவேர்-ஆடாதோடை - கொன்றைவேர்-இந்துப்பு - பெருங்காயம்-புங்கம்பட்டை-இவை தினுசுக்கு-(உ) பலமாக வெடுத்திடித்து இரண்டுபடி தண்ணீரில் போட்டு - கால்படியாக வற்றக்காச்சியிரக்கி-குழந்தைகளுக்கு - காலைமாலை - ஒருபாலடைவீதம் கொடுத்துவர உளமாந்தம் நிவர்த்தியாகும்.

## அட்சரமாந்தகுணம்.

எண்சீராசிரிய விருத்தம்.



நாடுமேஅஸ்தியிலே சூடுகொண்டு
நல்லுடம்புகுளிர்ந்துசுரங் காயும்ஓயும்
ஓடியதோர்சுவாசத்தால் அனல்புடைக்கும்
உதடுகளும்வெளுத்துவாய் புண்ணும்நெஞ்சு
தேடியன்னைகழுகவப்பால் துயரம்மெத்தத்
தேம்பிவாய்திரப்பதற்கு அருமையாகி
வாடுமேசிறுவனுக்கு தேகமெல்லாம்
வழும்புடனேபேதியக்ர மாந்தமென்னே. (உக)





அட்சரமாந்தத்திற்கு
எண்ணெய்.



மணத்தக்காளி - அகத்தி-இவ்விரண்டின்சாறு - ஒருசேர்-கற்றாழைசார்(க)-சேர் - வெள்ளைப்பூண்டின்சார் - (க)சேர்-பூலாத்திவேர் (க)பலம்-மெழுகுபோல்அரைத்து வெந்தயம் (க)பலம்-வறுத்திடித்து யாவும் ஒன்றாய்கலந்துக்கொண்டு அடுப்பேற்றி சிறுதீயாகயெரித்து மெழுகுபதமாய்காச்சி வடித்து புண்வாயில் தடவிவரவும் தீரும்

## பேய்மாந்தகுணம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இடுப்புடன்கைகால்நெற்றி இம்முகம்விழியும்மூக்கு
பிடித்திடும்பிடரிதன்னை பின்னித்தான்நரம்பைப்பற்றி
வடிப்புடன்வலிப்பிழுப்பு வாயினில்நுரைநீர்வீழும்
படத்தகல்அல்குலாளே பாருபேய்மாந்தந்தானே. (௩௰)

{ இந்தபேய்மாந்தத்திற்கு பின்வரும் வல்லாரைநெய் கொடுக்கத்தீரும். }

{ பட்சிதோஷம்-மாந்தம்-சுழிமாந்தம் வயருப்பிஷம்-கணம்-நாவரட்சி-காச்சல் குளிர்-தொந்தசுரம்-முக்குணம்-பால்கிரிச்சினம் }

இவைகட்கு

கஸ்தூரியெண்ணெய்.

கஸ்தூரி-கோரோசனை - கோஷ்ட்டம்-அதிமதூரம்-சீரகம்-திப்பிலி - தேவதாரம் - சந்தனத்தூள் - ஏலம்-மாசிக்காய்-வெந்தயம்-சுக்கு - வெள்ளைப்பூண்டு-வசம்பு-ரோகணி - பச்சைமூங்கில்

தோல்-இவைவகைக்கி விராகனிடையாகவெடுத்து வறுத்துபொடி த்து - எருமுட்டை பிரரிசாற்றினல் அரைத்து வழித்து - விள க்கெண்ணெ-ஒருபடியில் கலந்து-அடுப்பேற்றி சிறுதீயாயெரித்து மெழுகுபதமாய் வடித்துவைத்துக்கொண்டு - மேற்கூரிய வியா திகட்கு - சிறுவர்களின் தேகதிடமரிந்து சிறுகரண்டி யெண்ணே க்குமேல்படாமல் கொடுக்கவும் - சுட்டபுளி வறுத்தவுப்பு பத் தியங்காக்கவும்-தீரும்.

## பதினெட்டுமாந்தத்திற்கும்

### ஜாதிக்கா யெண்ணெய்.

ஜாதிக்காய்-ஜாதிபத்திரி-கிராம்பு-ஏலம் - கோஷ்ட்டம்-அதி விடையம்- குங்குமப்பூ-அதிமதூரம்-கண்டுபாங்கி-சித்திரமூலம்- சுக்கு-செவ்வியம்-பேராத்தை-கடுக்காய்-தான்றிக்காய்-மாசிக்காய் சீரகம்-கருஞ்சீரகம்- வால்மிளகு - குராசாணிஓமம் - சதகுப்பை இவைகள் - வகைக்கு இரண்டுவிராகனிடை - ஓமம் - ருி-விராக னிடை - வசம்பு-ரூ-விராகனிடை வசம்பைமாத்திரம் சுட்டு சா ம்பலாக்கி மற்றமருந்தெல்லாம் இடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு - கணப்பூண்டின்கொழுந்து - பழம்பாசி - இ லந்தங்கொழுந்து - துணுக்கொழுந்து - நாவல்கொழுந்து விடதா ரியிலே - கருவேலன்கொழுந்து சங்கிலே-கழச்சிக்கொடி - பங்கம் பாளே-விஷ்ணுகரந்தை - கிலுகிலுப்பை - சடைச்சியிலே-குதிரை க்காலியிலே - சிறுபுள்ளடி - கண்டங்கத்திரி - செருப்படை-சோ சியிலே-துளசி-தும்பை - கோழியாவாரை - ஆடாதோடை - வல் லாரை-பொடுதலே - முக்காவேளே - முருங்கை - வாட்பூலாயிலே- இவ்விலேகள் சமமாய் கொண்டுவந்து இடித்து - (க) படிசாறுபி ழிந்து உப்பிலாங்கொடி - பெருங்கிழங்கு- பூதகரப்பான்பட்டை வாதகரப்பான்பட்டை - திருநீற்றுபச்சைவேர் - கருவேப்பிலே

ர்க்கு - இவைகள் வகைக்கு - கால்பலமாயெடுத்து சூரணித்து முன்மருந்துகள் சாறுவகைமுதலானதும் ஒன்ருய்கலந்து விளக்கெண்ணை - ஒருபடிகூடவிட்டு நன்ருய்கலந்து-முலைப்பால் ஆழாக்குவிட்டு - அடுப்பேற்றி - பதமானதீயெரித்து - மெழுகுபதமாய்காச்சி - வடித்து - சிறுவர்களுக்கு - கரண்டிவீதம் கொடுக்க மேற்கூறிய வியாதிகள்யாவும் தீரும் அதாவது பதினெட்டுமாந்தம் - எட்டுவிதகணமும் - தீரும். பெரியவர்கள் (எ) நாள் குடிக்க - மேகம்கிரந்தி - சொரிச்சிரங்கு வாய்வு முதலானதுகளும் தீரும். கடும்பத்தியம் காக்கவேண்டும்,

---

## மாந்தவகுப்பு

முற்றுப்பெற்றது.



உ

பதினெண்சித்தர்

திருவடிகளேசரணம்.

# கணவகுப்பு.

கணங்கள்வரும்

குறியறிய

அறுசீராசிரிய விருத்தம்.

ஐயமும்கூடிற்றென்றால் அரிவையர்துயரந்தன்னால்
செய்யபற்புனலருந்தி செரிஜலதோஷந்தன்னால்
பையரவல்குலாளும் பசியுடனிருந்ததாலும்
துய்யதோர்குழவிகட்கு கணங்களும்தோன்றுமென்றே. (கக)

இதன்விவரம்.

ஸ்ரீகள் கெற்பமாயிருக்கும்போது சிலேத்துமம் அதிகப்படுவதாலும் - பலசிந்தனையினால குரலிட்டு அழுவதினாலும் - பலவிதமானஜலம் - அருசுவைசேர்ந்த அசுத்தநீர்களை அருந்துவதினாலும் - தகுந்த ஆஹாரமில்லாமல்-இடையிடை பட்டினியாக இருப்பதினாலும் - அதிகநடையினாலும்- வயற்றிலுள்ள சிசுக்களுக்கு கூடுபற்றி கணமென்னும் வியாதி அணுகுமென்று முன்னோர் வகுத்தனரென்றறிக.

கணங்களின்நாமங்கள்,

வாதகணம் - பித்தகணம் - சிலேட்டுமகணம் - மாந்தகணம்-
நீர்கணம்-பிரளிக்கணம் - சூலிகணம் - சுழிகணம் - மஹாகணம்-
ஊதுகணம் - வரட்கணம் - கொதிப்புகணம் - வீக்ககணம் - பிரக்

கணம்-அந்தகன்கணம் - மந்தாரகணம் - எரிகணம்- நீராமகணம் ஆமகணம் - மூக்குகணம்-மூலகணம்- போராமகணம் - இரத்தகணம் - ஆ௨-௨௩-கணமென்றறிக

## வாதகணத்தின் குணம்

வாதகணத்தின்குணத்தியல்பை வகுப்போமஉடலும்பாரமதாய்
போதயிறைக்கும்நாவரளும் புகைந்தேயிருமும்தாகமுடன்
பாதவறைக்கும்சாங்காயும் பசியுமெடுக்காமலங்கருகும்
பேதமாகநீர்சுருக்காம் பித்தகணத்தின்குணங்கேளே. (௩௨)

## பித்தகணத்தின் குணம்

கேளேபித்தகணத்தியல்பை கெடியவுடலும்யெரிச்சலுண்டாம்
காளேஉலர்த்திமார்பிடிக்கும் நாக்கும்கடவாய்ப்புண்ணாகும்
பாளேசுரமுங்காய்ந்தெரிக்கும் புருக்கக்கழியும்மஞ்சளைப்போல்
தானேமயக்கும்தலைகிறுக்கும் சாற்றும்சிலேட்டுமகுணங்கேளே.

## சிலேட்டுமகணத்தின் குணம்

குணமாம்சிலேட்டுமகணத்தியல்பை கூறக்கேளுஉடலெல்லாம்
உணவாய்தினவுமெடுத்துசொரி [illegible]ரிக்கரங்கால்வீக்கமதாம்
மணவாய்நாறும்வெடிப்புடனே மார்பிற்கோழையிருமலுடன்
அணுமேவெடுத்துபுண்ணாகும் ஆராதவனமிருத்திடுமே. (௩௪)

[*]

# சிலகணங்களின்குணத் தொகுப்பு.

## வசனம்.

மாந்தம் அதிகப்பட்டு - கண்குழியும் - வயிறுநோகும் - நாவு வெந்துபுண்ணாகும்-அதிகமூச்செரியும்-இருமல்கொடுக்கும் உட ல்பலவிதமாக நலிகொடுக்கும் - பொறுத்துபொறுத்து- சுரமுண் டாம் - கண்களின்நிறம் வேறுபடும் - வெரித்து உருட்டிப்பார்க் கும் - குழிபோல் உச்சிதாழும் - தொண்டை கம்மல்கொடுக்கும் முகம் குருவேர்வை கொடுக்கும் - வயர்காந்தலாய் கழியும் - சித ரத்தமாய் கழியும் - கெட்டபால்போல்கழியும் - தண்ணீர்போல கழியும் - வயர் உப்பும்-கைகால்முகம்கருகும் - யெரியும்- சில சம யம்குளிர்ந்துவேர்வைவிடும் வெதுப்புண்டாகும் விடாமல் இரு மும்-உடம்பு அதிககனகனப்பினால் பென்னேரமும் கைவிடாது வாய்வுலர்ந்து தண்ணீர்கேட்கும் - மலம்வழுவழுப்பாய் விழும் அபானவாசலில் மலம்கசிந்தபடியாயிருக்கும்- மார்புகூண்டுபா லெழும்பும்-இதுகள் - கணம்-கணமாந்தங்களின் குறிப்புகளாம். இத்தன்மையானகுறிகள் கண்டால்கணமென்றறிவீராக.

## கணத்துக்கு எண்ணெய்.

நிலக்குமிழிவேர் - சிறுஅம்மான்பச்சரிசி - எருக்கன்வேர் சூரியகாந்திவேர் - விஷ்ணுகரந்தைவேர் - ஆவாரைவேர்- கொன் றைக்கொழுந்து - கணப்பூண்டுவேர் - வகைக்கு (க)-பலம் நிறுத் தெடுத்து இடித்து - ஒருபடிவிளக்கெண்ணெயில்போட்டு மருந்து கள்வெந்தபிறகு - அடுப்பைவிட்டிறக்கி - ஒருபீங்கானில் யெண் ணையை யிறுத்துக்கொண்டு - ஏலம்-சீரகம்-அதிமதுரம்-வகைக்கு ஒருபலம்-எடுத்து வறுத்துஇடித்து பொடியாய் மைபோல்வஸ்தி

ரகாயம்செய்து வெண்ணெயில்தூவி நன்றாய்கலக்கிவைத்துக்கொண்டு-வேளைக்கு-ஒருகாசிடையாகஎடுத்து - மூலைப்பாலில்கலக்கி ஒருபாலடையாக-ரு-நாள்கொடுக்க கணமெல்லாம்போகும் குழந்தைகள்திரேகம் தணியும்-சுட்டபுளி-வறுத்தவுப்பு - கூட்டவும் வாதபண்டங்கள்கூடாது

## கணத்துக்குக் குடிநீர்.

வில்வபத்திரி - துத்தி-வெங்காயம் - வெந்தயம்-சரியிடையாயெடுத்து வறுத்துஇடித்து - அரைப்படிஜலத்திலிட்டு அரைக்கால்படியாக வற்றக்காச்சி - யிரக்கும்பொழுது சீரகம்வறுத்து பொடித்துப்போட்டு யிரக்கிகொடுக்க கணங்கள்வலிவடங்கி நிவர்த்தியாகும்.

## கணத்துக்கு
## சூரியபுட எண்ணெய்.

சிறுபுள்ளடி - கழற்கொடிகொழுந்து - அவுரியிலை - சாணக்கிழங்கு-பொடுதலை - வகைக்கு-ஒருபிடியெடுத்து - நன்றாயிடித்து-அரைப்படி நல்லெண்ணெயில்கலந்து - சூரியபுடம்வைத்து உள்ளுக்குஒருகரண்டி சாப்பிட்டு - மேலுக்கும்பூச கணதோஷகுணங்கள் நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்.

## கணத்துக்குவேறு
## எண்ணெய்.

விளக்கெண்ணெ - அரைப்படி-வில்வஇலைசாறு அரைப்படி-அவுரி - வெங்காயம்- பூண்டு-இவைகளின்சாறு வகைக்குஉழக்கு

எடுத்துயாவும் ஒன்ருய்கலந்து - கடுக்காய்-உ-பலம் - மையோலி டித்துபோட்டுகாச்சி - குழந்தைகளுக்கு - ஒருசாண்டிவீதம்கொ டுக்க - கணங்கள்நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்.

## கணத்துக்குவேறு
## நெய்.

நல்லெண்ணை - நெய்-வகைக்கு கால்படியாயெடுத்து கலந்து கோஷ்டம்-அவுரி - நிலக்குமிழம்வேர்-கடுகுரோகணி - விலாமிச் சை-கிராம்பு-வெள்ளைகாயம் வகைக்கு - (கஉ) பலமாக நிறுத்து- எடுத்து - நெய்விட்டரைத்து - மேற்படிபாகில்கலந்து மெழுகு போல் ஆகிரமட்டும் அடுப்பிலிட்டுகிளறி யிரக்கிக்கொண்டு - இ லந்தங்காய் பிரமாணம் கொடுக்க கணச்சூடுகள் நீங்கும். இச்சா பத்தியம்.

## கணத்துக்குவேறு
## மருந்து.

கீழாநெல்லியின் வேர்பட்டை - கருவேப்பிலை - சீரகம்-பச் சைநெல்லுமி வகைக்கு - விராகனிடை-(க) இடித்து முலைப்பால் தளரவிட்டு ஒருநாள்முழுதும் வெய்யலில்வைத்து மறுநாள்காலை யில் அரைத்து கொடுக்கவும் மாலையில்மிளகுவறுத்து சாம்பலா க்கி சீரகம்சற்றே பொரியவிட்டு தண்ணீர்விட்டுகாச்சி கொடுக்க வும் - இப்படி-ந-நாள்கொடுக்க நிவர்த்தியாகும்.

## கணச்சூடுதணிய
## எண்ணெய்.

சித்தாமணக்கெண்ணை - படி-(க)-வல்லாரைசாறு படி- (உ) வெந்தயம்-பலம் - (உ) பசும்பால்விட்டறைத்து - எண்ணெயிற்கல

ந்த அடுப்பேற்றி மெழுகுபதமாய்காச்சி-(க)-பலம்-சக்கரைபோட்டு - சிரக்கிவைத்துக்கொண்டு - காலையில் கரண்டிவீதம் கொடுத்துவர உடம்புதணியும்.

## கணம்இருமல் வாய்நாற்றத்திற்கு

## கியாழம்.

மணத்தக்காளி ஒருபிடி - வெந்தயம் பலம்-ச- வெங்காயம் பூண்டு-ௗ-துட்டிடை பொன்னிறமாய்வறுத்து-இரண்டுபடிஜலம் விட்டு - எட்டொன்றாய் காச்சிவடித்து-ௗ-நாள்காலைமாலைகொடுக்க கணம்வாய்காற்றம்தீரும் இருமல் நீங்கும்.

## மாந்தகணத்திற்கு

## பச்சிலைசாறு.

நொச்சியிலை - துளசியிலை - முசுமுசுக்கையிலை - இவைகளை சமமாய் யெடுத்து - புட்டவியலாகச்செய்து சாறுபிழிந்து-பிள்ளைகளுக்கு ஒருசங்குகொடுத்துவர மாந்தகணம் நிவர்த்தியாகும்.

## மாந்தகணத்திற்குவேறு

## கியாழம்.

விஷ்ணுகரந்தை - துளசி - திப்பிலி - மாமரத்துமேல்புல்லுருவி-வகைக்கி ஒருபிடியெடுத்துஇடித்து கியாழமிட்டுக்கொடுக்க மாந்தகணம் நிவர்த்தியாகும்.

## பொருமல் மாந்தகணத்துக்கு

## மருந்து.

துளசி - செம்முள்ளி - தும்பை - சீரகம்- கஞ்சாங்கோறை தைவேளை-இவைகளையிடித்து சார்பிழிந்து - குழந்தைகட்கு ஒரு சங்குகொடுக்க ஷை-வியாதியகலும்.

## மாந்தகணபொருமலுக்கு

## லேகியம்.

சாரணைவேர்பட்டைதட்டி - தேசாவரம் - இரண்டுஞ்சமனு ய்கூட்டி தேனில் லேகியமாய்கிண்டி - இலந்தங்காய் பிரமாணம் குழந்தைகளுக்குகொடுக்க மாந்தகணப்பொருமல் நீங்கும்.

## மாந்தகணத்திற்கு

## நல்லெண்ணெய்.

மருள்கிழங்கு உள்ளியிரண்டும் சமமாயெடுத்து எலிமிச்ச ம்சாறும் நல்லெண்ணெயும் சமமாய்கலந்துமேற்கூரிய மருந்தை அறைத்து கலக்கிகாய்ச்சி வடித்து கரண்டிவீதம் கொடுக்கவும் கணம் மாந்தகணம் சிலேட்டுமம் இதுகள்தீரும் இச்சாபத்தியம்.

## மாந்தகணத்திற்குவேறு

## எண்ணெயும் கியாழமும்

பொடுதலைசார்-சிறுபுள்ளடிச்சார்-தகறைச்சார்- தக்காளிச் சார்-கருநொச்சில்சாறு - பழம்பாசிச்சாறு - வெங்காயச்சாறு-இ துகளின்சாறு - சமமாயெடுத்து - இதற்குச்சரியிடை விளக்கெ

ண்ணைசேர்த்து - மிளகு-வசம்பு-வெள்ளைப்பூண்டு-மூன்றும் ஒரு பிடிஎடுத்து இடித்து அறைத்துக்கலந்துகாச்சி - காலையில்-ஒரு கரண்டிகொடுக்கவும அந்தியில்சுக்குஓமம்-பொன்முசுட்டை வேளை--ஏலம்- திப்பிலி-மூலம்-இதுகள் சமன்கொண்டுஇடித்து கியாழம்வைத்து சிவக்கரத்தம்போல் காச்சியிறக்கி ஒருசங்குகொடுக்கவும் மாந்தகணங்கள் நிவர்த்தியாகும்.

---

## மாந்தகணத்திற்குவேறு

## எண்ணெய்.

வல்லாரை-பிரமியிலை - செருப்படை-நீர்முள்ளி-மணத்தக்காளி-முசுமுசுக்கை யெருமைத்தக்காளி-கோழியாவாரை - நெய்சிட்டி-இதுகள்வகைக்கி-ஒருபிடியாக யெடுத்துவந்து கல்லுரலில் அவைத்துகால்படிசாறுபிழிந்துவிளக்கெண்ணை (உ)படிவிட்டுதும்மட்டிக்காய் இடித்தச்சாறுசிரங்காய்-வெங்காயச்சாறு சிரங்காய்ஒன்றுய்கலந்து கடுகுபதமாய்காய்ச்சி கார்போகலரிசி-பூண்டு-கருஞ்சீரகம்-வசம்பு-வகைக்கி விராகனிடை வறுத்திடித்துபோட்டு கலக்கி மெழுகுபதமாய் யிரக்கிகொண்டு - வடிகட்டி சிறுகரண்டிவீதம் பிள்ளைகளுக்குகொடுக்க மாந்தகணம் அட்சரம் தீரும். கடும்பத்தியம்.

---

## ஊதுமாந்தகணத்தின்

## குணம்.

தானேஊதுமாந்தகணம் தனதாயஉரைப்பேன்மடமயிலே
வானேகாதும்கண்ணுடம்பும் வனமாய்வீங்கிநாப்புண்ணாய்
ஆனேகேளாய்சுரமுண்டாய் அன்னந்தண்ணீர்கொள்ளாது
கானேகாலும்கைசோர்ந்து கனத்தசுவாசம்அதிகமென்றே. ()

---

இதுவுமது.

அதிகமாய்ஊதுமாந்த கணமதுபனிரெண்டாண்டு
அதிகமாம்அன்னுள்மட்டும் ஆமிதுநோயின்காலம்
அதிகமாய்மருந்துகேளா யன்புடன்உரைப்பேன்தானே
அதிகமாம்தேவிவாலே அருளினுலகலுந்தானே. (கசு)

ஊதுமாந்தகணந்திற்கு

எண்ணெய்.

தாமறை-ஒரிதழ்தாமரை - வட்டத்திரிப்பி-பற்பாடகம்-மூத்தம்-சூரத்துனிலாவிரை - முள்ளி-நீர்முள்ளி - இண்டம்வேர்-கையான்தகறை-கண்டங்கத்திரி - வசம்பு-ஏலம்-வெட்பாலரிசி - வால்மிளகு - ஜாதிப்பத்திரி-மாசிக்காய் - கடுக்காய்- அதிவிடையம்-இதுகளைவகைக்கு கால்பலமாகயெடுத்துயிடித்துபொடித்துவைத்துக்கொண்டு - வெங்காயச்சார் தேங்காய்ப்பால் செங்கழுநீர்-வல்லாறைசார் - கலியாணமுருக்கன்சார் - செங்கத்தாரிஇலைசார்-மாதளம்பழச்சார் - இதுகள்வகைக்கு (வீசம்படியாக) யெடுத்து இதற்கு சரியிடைவிளக்கெண்ணெவிட்டு முன்பொடித்தசூரணமுங்கொட்டி - விளாம்பிசின் (கால்பலம்) மருக்காரைபிசின் (கால்பலம்) பொடித்துபோட்டு அடுப்பேற்றி கடுகுதிரண்டபதத்தில் யிரக்கி - காலையில்-ஒருவேளைமாத்திரம் துட்டிடைகொள்ளவும் இப்படிமூன்றுநாள் சாப்பிடவேண்டியது. மீன்-கருவாடு-உப்பு-புளி-புகை-கைப்பு - ஆகாது - தாயார்கடும்பத்தியமாயிருக்கவேண்டியது

## கணமாந்தகுணம்

மாந்தகணமென்பதுக்கும் ஓவ்வும்.

ஜடலமாங்சருவிலான சிசுவதற்கின்னங்கேளு
விடலமாங்கணமாந்தத்தின் மிகுங்குறிகுணத்தைப்பாரு
அடலமதாகப்பெண்ணுள் அடைவதாய்தலைக்குயெண்ணெ
தடமதாய்தேய்த்துசுத்த ஜலமதில்முழுகினுலே. (௩௭)

முழுகியேஅன்னமுண்டு முடுக்கெனவெழுந்தபோது
அழகியமயக்கசோபதாபமு மிகுதியாலே
தழுவியேபடுக்கமாது சடுதியில்உறக்கங்காணில்
விழுகியநாபிவாய்வால் விரகலாகிரிதானுமே. (௩௮)

ஆகுமேஅவள்மோகத்தால் நாயகனோடேசேர்ந்து
நோகவேதேகமெல்லாம் நுசிதமல்லாமெபோது
தாகபோகத்தாலந்த சமானனும்வாய்வெழும்பி
ஏகிடும்கமலம்புக்க இருந்திடும்குளுமைவந்தே. (௩௯)

குளுமையாயேழுநாளும் கூரியதலைபிடிக்கும்
எளுமையாம்பெண்ணுளுக்கு யெழும்பிடும்கபாலசூலை
வளமையாம்பின்னும்ஏழு வளம்பெறநாள்சென்ருக்கால்
வெளுமையாய்தேகமெங்கும் வெளுத்துடன்வயருநொந்தே. ()

நொந்ததால்சூதகத்தில் நோயதுவென்றுசொல்வார்
பந்துபோல்நாபிதன்னில் பாசிபோல்இருக்குதென்பார்
வெந்துதான்பித்தசூட்டால் மிகுந்ததோர்நோயிதென்பார்
தந்திரவாய்வினாலே ஜன்னியும்பிதுவென்பாரே. (௪௧)

இதுவெனும்கணமாந்தந்தான் யேரியேபெண்ணுக்கு
வதுவெனக்கருவில்பற்றி மைந்தனும்பிரந்துதானால்
பதுவெனமாதக்கேதான் பாலதுமிகுதியாகும்
அதுபத்துநாளுந்தானும் அமிர்தமேபெருகுந்தானே. (௬௨)

பெருகிடும்பத்துநாளும் பின்புநாள்மேலேசென்றால்
கருகிடும்மூலச்சூட்டால் கல்லதுபோலேகட்டும்
மருகிடும்அதுநாள்கொண்டு மைந்தனுக்கிளைக்கும்தேகம்
தருகிடும்வாந்திவாய்நீர் தலையதுசுழற்றலாமே. (௬௩)

தலையதுசுழற்றல்காணும் தான்வரும்நாளைகேளு
கொலையதுதந்தைதாயார் கொடுமைசெய்வினையினாலே
நிலையதாய்கர்மநோய்தான் நிலைத்திடும்சிசுவுக்கேதான்
அலையுரப்பிரந்தபிள்ளை யதற்கிரண்டாண்டுபின்னே. (௬௪)

பின்புமேவருகும்நோய்தான் பிலத்ததோர்வினையைக்கேளு
தென்புடன்தேங்காய்வாழை தித்திப்புவடைபாயாசம்
அன்புடன்பலாச்சுளைக ளரிசிபின்அடைகள்தானும்
நன்பதுகுழந்தைக்கேதான் ஊட்டிடில்கணந்தானுச்சே. (௬௫)

கணம்வரும்மார்தத்தாலே காதலன்குணத்தைக்கேளு
துணம்எட்டுநாளைக்குள்ளே துலங்கிடும்சத்திகாணும்
பணவயிரிரைச்சலாகி பாசிபோல்பேதியாகும்
விணவிழிசுழன்றுசோர்ந்து விடவிடெனறலரும்நாவே. (௬௬)

நாவதில்ஜலமிராது நடைமுதலசதிகாணும்
காவதுயென்றுபாலன் கதறிடும்எடுக்கும்தாகம்
கூவதுயென்றுநாலுநாளது கோஷ்டமாகும்
தாவதுகணமாந்தந்தான் தாயினால்அணுகும்வாறே. (௬௭)

அணுகிடும்மாந்தத்திற்கு அரைகிறேன்புத்தியாய்க்கேள்
வணுகிடும்இதனைப்போக்க வயித்தியர்உலகிலில்லை
நணுகிடும்மைந்தனுரை நாடிமுன்தாதுபார்த்து
கணுகிடும்கைவல்லயந்தான் தாவிதந்தாதியாமே. (சஅ)

தாதியைப்பார்த்து மாந்தநோய்தனைஅளவைதேற்றி
சேதியைசாத்தியாசாத்திய செயலினைஅரிந்துமேவி
தீறுதுகணமாந்தந்தான் தீரவேமருந்துகேளு
மேதினியோர்களுக்கு விளம்புவேன்யெண்ணைதானே. (சகூ)

## கணமாந்தத்திற்கு

## யெண்ணெய்.

| | |
|---|---|
| சித்திரமூலம் | சிற்றுமல்லி |
| குன்றிக்கொடி | பேராமல்லி |
| சங்கு | காட்டகத்தி |
| முல்லை | ஆவாரை |
| முன்னை | பொன்னுவாரை |
| தாளிவேர் | மணத்தக்காளி |
| கொன்னைக்காய் | வேளைவேர் |

இவைகளின்வேர் வகைக்கி (முக்கால்பலமாக) நிறுத்திடித்து (உ)படிதண்ணியில்போட்டு கறைத்துவைத்துக்கொண்டு

| | |
|---|---|
| புனல்முருங்கை | தகரையிலை |
| கத்தூரி | நன்னாரி |
| காய்வேளை | பிரமியிலை |
| சிறுகுரிஞ்சான் | தும்பையிலை |
| இண்டம்இலை | பொன்னாங்கண்ணி |
| | முசுமுசுக்கை |

இவைகள் வகைக்கு பலம் ஒன்றாகவெடுத்து உரலிலிட்டு இடித்து சாரெழிந்து முன்னீரில்விட்டு கலக்கிவைத்துக்கொண்டு கடைசரக்குகள் சேர்க்கவும்.

---

| | |
|---|---|
| வால்மிளகு | அதிமதுரம் |
| சடாமாஞ்சில் | கோஷ்டம் |
| அக்ராகாரம் | கற்கடகசிங்கி |
| செண்பகப்பூ | சுக்கு |
| செவியம் | தான்றிக்காய் |
| கடுக்காய் | லவுங்கப்பூ |
| ஜாதிக்காய் | கடுக்காயப்பூ |

இவைகள் வகைக்கு (உ ற) விராகனிடையாகவெடுத்து இளம் வறுப்பாய் வறுத்து உரலிலிட்டு இடித்து வஸ்திரகாயம்செய்து முன்கலக்கி வைத்திருக்கும் மருந்தில்கலந்துக்கொண்டு பெரும் சரக்குகள் சேர்க்கவும

கெந்தி-வீரம் - தாரம்-வாளம் - நாபி-வெள்ளை அப்பிரேகம்-கற்பூரசிலாசித்து-கஸ்தூரிவகைக்கு - (கால்பலம்) வாங்கி-போாமணக்கெண்ணைவிட்டு மைபோலரைத்து - முன்மருந்துடன்கலந்து அத்துடன் - இரண்டுபடி போாமணக்கெண்ணைவிட்டு அகப்பையால்கலந்து அடுப்பிலேற்றி தீமூட்டவும் - கமலாக்கினியாக-உ-ஜாமம் எரித்து பார்க்கவும். நீரெல்லாம்வற்றி எண்ணையளவுவரும்போது இறக்கி ஆற்றிவடித்துவைத்துக்கொள்ளவும்

---

இந்த யெண்ணையை

## சாப்பிடும்முறைமை.

குழந்தைகள பால்குடிக்கும் பருவமாயிருந்தால் - தாயாருக்கு காலைவேளையில்-(௬) குன்றியிடை உள்ளுக்கு கொடுக்கவும் கொடுத்தஅரைநாழிகை சென்றவுடன் - லவுங்கப்பூ-மிளகு-பழயகொருக்காய்ப்புளி-சமயிடையாய்சேர்த்து படிநீர்விட்டு அரை

ப்படியாய்காச்சி பிரக்கி-உப்பு - சிவக்கவறுத்துக்கூட்டி சாருசெய்து காலாழாக்குகொடுக்கவும் பிறகுவென்னீர்விட்டு அன்னம் கொடுக்கவும் வென்னீர் பரிமாரவும் கற்பச்சூடு நிவர்த்தியாகும் இளைப்பில்லாமல் பேதிபின்வழியாக பளம்நுங்குபோல கணச்சூடு கழன்றுவிழும்-க-அல்லது-உ-அல்லது - ந - நாளைக்குமேல் கொடுக்கப்படாது.

மேற்கூரியபடி தாயாருக்குகொடுத்த மைத்தாளுள் காலையில் குழந்தைக்கு (இரண்டுகழஞ்சிடை) கொடுத்து ஒருநாழிகை சென்று - ஷை - சார் - ஒருபாலடை கொடுக்கவும் - இரண்டுதரம் பேதியாகும் - பிரகு பசும் பால்விட்டு அன்னம் கொடுக்கவும் இப்படி - கூ - நாள் யெண்ணை கொடுத்து - ( ய ) வதுநாள் ஓமந் தேய்த்து தலைக்கிவார்க்கவும் - அன்றயதினம் சிறுபருப்பு போட்டு பொங்கிய சாதம் கூட்டவும் தாயாரும் இவ்விதமாகவே சாபபிட வேண்டும்

## கணமாந்தத்திற்குவேறு மருந்து.

வால்மிளகு - பூண்டு-ஓமம்-வசம்பு-கருஞ்சீரகம்-கிரும்பு-சண்பகப்பூ-சரியிடையாயெடுத்துஇடித்து-பொடிதலைசார்விட்டுநெகிழஅரைத்து - கெச்சக்காய் பிரமாணமாக மூன்றுநாள் காலைவேளையில்கொடுக்க கணமாந்தம்போகும்

## கணமாந்தம்-வயற்றுளைவு-பொருமலுக்கு பாலசஞ்சீவிமாத்திரை.

துத்தம் - வெண்காரம்- கோரோசனை - கொள்ளுக்காய்வேளை-கடுகுரோகணி - வகைக்கு மூன்றுகழஞ்சியெடுத்து பொடித்து அகத்தியிலை சார்விட்டு ஒருஜாமம்வரையில் கைவிடாமல்

அரைத்து சிறுபயறுபோல் மாத்திரைகள் செய்துநிழலி லுலர்த்தி வைத்துக்கொண்டு - முலைப்பாலிலாவது - புட்டி வெல்லத்திலாவது - வெந்நீரிலாவது கொடுக்கலாம்-க - மாத்திரை - அல்லது திடத்த குழந்தைகளுக்கு ௨ - மாத்திரை யிழைத்துகொடுக்கலாம் இதனால் ஷை கணமாந்தம் வயறுளைவு - பொருமல்-சுரம் இதுகள்வாராது இதற்கு பாலசஞ்சீவியென்றுபெயர்.

## கணமாந்தத்திற்குவேறுவித எண்ணெய்.

| | |
|---|---|
| பொன்னாங்கண்ணி | தகரையிலை |
| வல்லாரையிலை | ஓரிதழ்தாமரை |
| புளியாரையிலை | புங்கம்பிலை |
| கீழாநெல்லியிலை | கோழியவரையிலை |
| துளசியிலை | தூதுவளை |
| சிறுபுள்ளடி | அம்மான்பச்சரிசி |
| வரட்பூலா | துவரையிலை |
| பீர்க்கிலை | வேளையிலை |
| சூரையிலை | நிலக்கடம்பு |
| வெண்ணொச்சியிலை | உத்தாமணி |
| அவரையிலை | ஆடுதின்னாப்பாளை |
| சென்னாயுருவி | தக்காளி |
| கொள்ளுக்காய்வேளை | ஆடாதோடை |
| காவட்டம்புல் | கருநொச்சி |
| கணப்பூண்டு | நாய்வேளை |
| நுணாத்துளிர் | சின்னியிலை |
| குதிரைக்காலியிலை | வேம்பு |
| முசுமுசுக்கை | சிறுகீரை |
| பொன்முசுட்டை | முருங்கிலை |
| நிலக்குமிழ் | நரிமிரட்டி |

| | |
|---|---|
| ஆவாரை | அத்தியிலை |
| கண்டங்கத்திரி | விஷ்ணுகாந்தி |
| வில்வம் | சங்கம்குப்பி |
| சீந்தில் | தாளியிலை |
| குட்டிவிளாயிலை | நாவல்துளிர் |

இவையாவும் ஓருசமமாய் கொண்டுவந்து கல்லுரலிலிட்டு இடித்து (க) படிசார்பிழிந்துக்கொண்டு இத்துடன் சீரகம்-கிராம்பு-வசம்பு - வெள்ளைப்பூண்டு-திப்பிலி- பற்பாடகம்-கடுகுரோகணி - மஞ்சள் - மணிப்புங்கன்பழம் வெங்காயம்-ஆமையோடு கருஞ்சீரகம் கடல்நுரை - இவைகள்வகைக்கு (க) பலம்எடுத்துயிடித்து மேற்படிசாறுடன்கலந்து சித்தாமணக்கெண்ணை (க) படி அத்துடன்விட்டு மருந்துசாறுயெண்ணையாவும் ஒன்றுபடக் கலந்து அடுப்பேற்றியெரித்து சிவந்துவரும் இளம்பதமாகக்காச்சி யிரக்கிவைத்துக்கொண்டு துட்டிடையாக ஏழுநாளைக்கி காலைவேளையில் கொடுக்கவும் உப்பு - புளி-சேர்க்காமல் கடும்பத்தியம் கார்க்கவேண்டியது மறுபத்தியம் (எ) நாளும் சுட்டபுளி-வறுத்தவுப்பு கூட்டவும்ஓமந்தேய்த்து தலைமுழுகவும் எழுவகை மாந்தங்களும் தீரும்.

## நீர்கணமாந்தகுணம்.

அறுசீராசிய விருத்தம்.

இருமும்மூக்கில்நீர்வடியும் இடையில்யிடையில்சுரங்காயும்
பொருமியவயறுஇரைச்சலுண்டாம் போதப்பலவிதமாய்க்கழியும்
சொருகுங்கண்ணுமுடம்புமுகம் சோர்ந்தேதலையும்புரட்டலுண்
டாம், மருவிமயக்கமுண்டாகும் வருநீர்கணமாமிதுதானே. (௫ய)

10164



நீர்கணமாந்தம் (அ)க்கும்-குடற்பவேன்
நீர்ப்பாடு-கர்ப்பப்பாடு-நாவரட்சி-சுரம்
குலேயெரிவு-வெப்புமுதலியதோஷங்களுக்கு

## அமுர்தாதிக்குளிகை.

அதிமதுரம் செண்பகப்பூ-ஏலம்- கோரோசனே - சாஸ்திர பேதி - வெட்டிவேர்-கோஷ்டம்-மாசிப்பச்சை-விலாமிச்சம்வே ர்-இவைகள் சரியிடையாயெடுத்து ஆதண்டைசார்விட்டு ஒருஜா மம்வரைமிலும் மைபோலறைத்து குன்றிபிரமாணம் மாத்தி ரைசெய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு முலேப்பாலில்-க- அல்லது - உ-மாத்திரையுறைத்துக்கொடுக்க மேற்கண்டவியாதி கள்யாவும் தீரும் இச்சாபத்தியம்.

இயக்கத்தின்கணமாந்தம்-போர்மாந்தத்திற்கு

## கோடாசுழிதைலம்.

வசம்பு-ஓமம் - வெள்ளேப்பூண்டு பச்சைக்காய்வகை (க) பலம்யெடுத்து இடித்து மெல்லியதுளாய்செய்து (உ)படி வேப் பம்யெண்ணேயில கறைத்து ஒருநாழிகைமட்டில் அடுப்பேற்றி யெரித்து பிறகுஎடுத்து (சு)நாள் சூரியபுடம் வைத்தெடுத்துக் கொண்டு வடிக்கட்டிவைத்துக்கொள்ளவும் குழந்தைகளின் தே கநிதானம் உ-துட்டிடைமுதல் நெய்க்கரண்டிவரையில் கொடுக் கலாம் - மாந்தம்-கணமாந்தம் - போர்மாந்தம் சகலமானமாந்த ங்களும்தீரும் தாயாரைதகுந்த பத்தியத்தில் வைக்கவும்.

# சிங்கிமாந்தகணத்தின்குணம்.

அதேவிஷமாந்தகுணம்.

விருத்தம்.

போரான்சிங்கிமாந்த கணத்தைக்கேளு
　　பெருமையாயுந்திதனல் மேலெழும்பி
வாரானயிறலுமே புண்ணுய்வெந்து
　　வலுமையாய்சுவாசமே விழுப்புமாகி
சீரானதேகமுமே முழுதுங்காய்ந்து
　　சிவசிவாதணல்போலே சுரமும்வீசும்
வீரானசுவாசமது திக்குமுக்காடி
　　வெகுளியாய்மயக்கும் சிங்கிகணமாம்பாரே. (௫௧)

சிங்கிகணம் சுரமிருத்தால்பிள்ளைகட்கு
　　சிவசிவாமாந்தகணமிதுதானென்பார்
சிங்கிகணமாந்தமிது வேதென்ருக்கால்
　　சீரகற்றிபதிமூன்று பிராயமட்டும்
சிங்கிகணமாந்தமது யிருப்பிடந்தான்
　　சிறுவனென்றபிள்ளைக்கு சுரந்தானுடும்
சிங்கிகணம்ஒழிவதற்கு அமுர்தாதித்தான்
　　க்ஷணமதிலேவிள்ளுகிறேன் சித்தர்வாக்கே. (௫௨)

## சிங்கிமாந்தகணத்திற்கு அமுர்தாதிகுளிகை.

அதிமதுரம் - கோஷ்டம் - ஏலம்-கோரோசனை - சாஸ்திர பேதி-செண்பகப்பூ - மாசிக்காய் - இலவுங்கப்பூ - இதுகள்வகை க்குக் கால்பலமாகஎடுத்து கல்வத்தில்பொடித்து வெட்டிவேர் மாதிப்பத்திரிவேர்-கருந்துளசி - விலாமிச்சு-இந்தநால்வகையின்

சார்பிழிந்து ஒவ்வொருசாற்று லொருஜாமம் அறைத்து குண்டு மணிபோல் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி செப்புடப்பியில் வைத்துக்கொள்ளவும்.

மாசித்பத்திரி யாழத்தில் (க) மாத்திரை யிழைத்துகொடுக்க முன்சொன்னமாந்தம் தீரும் லவுங்கப்பூ யாழத்தில்கொடுக்க மாந்தசுரம்தீரும் முலைப்பாலில்கொடுக்க நீர்படுவன் நீர்ப்பாடு தீரும் நாவரட்சிஅன்னவிடாய் சுரம்தீரும்

## நீர்கணத்தின்குணம்.

அறுசீராசிரியவிருத்தம்.

நீர்க்கணக்குணமேகேளு நீரின்மேல்மனதுவைக்கும்
வேர்க்குங்கணதாழ்ந்துசற்று வேர்வையில்வெதுப்புதோன்றும்
நாக்குவாய்வரண்டுகாணும் நல்லநீர்கழிச்சலுண்டாம்
பார்க்கிலோநீர்கணத்தின் பலவகைகுணங்களாமே. (ருக

இதுவுமது.

தாகமும்கழிச்சலுண்டாம் தலையதுசுழற்றல்காணும்
வேகமாய்சுரமும்சற்று விட்டுவிட்டுடனேகாயும்
வாகுசேர்கண்ணுந்தாழ்ந்து வாயுடன்நாவுலர்ந்து
சோகமும்வயற்றில்நோவாய் சோர்ந்துகைகால்தண்ணீரே. ()

இதுவுமது.

முகமும்புரங்கால்புரங்கையுமோதி மினுமினுப்புண்டாகும்
தகைசேர்தாகமதிகரித்துத்தண்ணீர் உழலுமிகக்குடிக்கும்
மிகவேமயக்கும்வெதுப்புண்டாம் வெடித்துநாவும்புண்ணாகும்
மகமேர்லத்ததனத்தாளே வருநீர்கணத்தின்வகையாமே. (ருடு)

### நீர்கணத்துக்கு குடிநீர்.

சாரணைக்காய் - மூக்குரட்டைக்காய் - பொடுதலைக்காய்-சுக்கு-திப்பிலி - மிளகு-துளசிதுளிர்-சீரகம் - இவ்வெட்டுவகையும்

சமஇடையாய் கொண்டுவந்திடித்து (௩) படி ஜலத்திலிட்டு அரிக்கால்படியாகக் குறுகக்காய்ச்சி பிரக்கிவடித்து காலைமாலையாக மூன்றுநாள் கொடுக்க நீர்கணத்தின் சேஷ்டைகள் நீங்குமாம்.

## சுழி கணத்தின் குணம்.

அறுசீராசிரியவிருத்தம்.

சுழியெனுங்கணமேசொல்லில் சுழியவேசுவாசம்வாங்கும்
தளிருடன்சுரமுந்தோன்றும் நயனம்பஞ்சடைந்துகாணும்
தெளிவுடன்சந்துசோர்ந்து திகைக்கநெஞ்செரிப்புகாணும்
குழியுமேஉச்சிதாழ்ந்தால் குணமிதுவென்றுசொல்லே. (௫௨)

* நயனம் - கண்

மின்னேகேளாய்சுழிகுணந்தான்மேவிச்சுவாசம்பிருமலுண்டாம் பொன்னேமுகமும்மார்புகண்டம் புடைத்துக்காணும்உண்மையிது, சொன்னேம்வயறுமிறல் நெஞ்சுதொண்டைநாவுமிவைவெந்து, அன்னைமுலைப்பால்குடியாமல் அலரியழுகும்கணடாயே. ()

இருமும்செருமும்மேல்மூச்சு இருகைகாலும்குளிர்ந்திருக்கும்
பொருமும்வயறுதான்ஊதும் பொல்லாச்சுரமும்மிகவுண்டாம்
அரிவைமுலையுங்குடியாது அயர்ந்துவெதும்பியலறிவிழும்
சொருகும்கண்ணும்நாவரண்டு சுழிகணம்செய்யும்குணமிதுவே.

மார்பிலேசுழியாய்காணும வாயினில்நுரையுங்கோழை
சேரிலேபிள்ளைவாந்தி செய்யுமேகழியுங்காயும்
மூரி[illegible]த்தில்மஞ்சள் முன்தலைமயக்கும்நோகும்
பாரினில்பாலகர்க்கு பரிந்துமேபார்த்திடவே. (௫௪)

### சுழிகணத்துக்கு சஞ்சீவி எண்ணெய்.

செண்பகப்பூ (௰)காசிடை- ஜாதிபத்திரி (௫)காசிடை கோரோசனை (௧)காசிடை இம்மூன்றும் கல்வத்தில்பொடித்து (௧)

படி விளக்கெண்ணெயிற்கலந்து அடுப்பேற்றிசற்றுகொதிக்கவிட்டிறக்கி (உ) துட்டிடையாகக் காலையில் உள்ளுக்குகொடுத்துவிட்டு உள்ளி-வசம்பு-உசிலேயின்பட்டை இம்மூன்றும் ஒவ்வொருபிடிகொண்டுவந்திடித்து ஒருபிடாஜலத்திற்போட்டு நன்றாய்காய்ச்சி வைத்துக்கொண்டு தாகத்திற்கு கேழ்க்கும்போதெல்லாம் இதையறிந்துக் கொடுக்கவும் இப்படிமூன்றுநாளில்தீரும் உப்பு வறுத்தும் புளிசுட்டும் கூட்டவேண்டியது தாய்பத்தியம்

## சுழிகணத்திற்குவேறு எண்ணெய்.

இண்டம்பிலே - கண்டங்கத்திரி - சாயவேர்- கடுக்காய்-வில்வம் வகைக்கி-கூ-காசிடையெடுத்து இதைபொடித்து உழக்கு விளக்கெண்ணெயில்கலந்து சூரியபுடமாக மூன்றுநாள் வைக்கவும் வைத்தாலும் முதனுள்முதற்கொண்டே சிறுகரண்டிவீதம் உள்ளுக்கு கொடுத்துக்கொண்டுவரவும் குண்டுமணிவேர் கிலுகிலுப்பைவேர் முசுமுசுக்கைவேர் - துளசிவேர் - வில்வம்-இதுவும்-கூகாசிடைவீதமாக எடுத்திடித்து கால்படிவிளக்கெண்ணெயில் கலந்து சூரியபுடம்வைத்து முன்போல் கொடுத்துவரவும் நிவர்த்தியாகும்.

## சுழிகணம்உப்பிசம்கோழைகட்டு இளைப்புக்குவேறுவித மருந்து.

குப்பைமேனிசார் துட்டிடை-உப்பு- துட்டிடை-வேப்பெண்ணெ துட்டிடை- இம்மூன்றும் நன்றாய்மத்தித்து இவ்விதமாய் மூன்றுநாள்புகட்ட இளைப்பு - உப்பிசம் சுழிகணம் தீரும்.

## சுழிநணத்திற்குவேறு

## எண்ணெய்.

கடுக்காய் - காட்டுமல்லி - ஆலின்மேற்புல்லுருவி யிலையின் பால் - முலைப்பால் - இண்டம்பிலைச்சார்-உள்ளிச்சார் இவைசமபிடையெடுத்து இதற்குசமன் ஆமணக்கம்யெண்ணை விட்டுகலந்து அடுப்பேற்றியெரித்து ஒன்றுக்குமுக்காலாக குருகக்காச்சியிரக்கி வேளைக்கி துட்டிடையாக அந்திசந்திகொடுத்துவர ௩-௫-நாளில்தீரும்.

## சுழிகணத்திற்குவேறு

## எண்ணெய்.

நந்தியாவட்டைவேர் நாய்துளசிவேர் - சிவதைவேர்-காட்டுமல்லிகைவேர் இதுகள்வகைக்கு புன்னைக்காயளவு அறைத்தசாந்து யெடுத்துக்கொண்டு கண்டங்கததிரிதூதுவேளை சின்னியிலை மணத்தக்காளி கொட்டைக்கரந்தையிலை குப்பைமேனி- கோழியாவாரையிலை - இவைகள் சமனாயெடுத்திடித்து (க)படிசார்பிழிந்து அத்துடன் (க)படிவிளக்கெண்ணைவிட்டு முன்னறைத்தமருந்தின்சாந்தையும் போட்டுகலக்கி அடுப்பேற்றி ஒருஜாமம்யெரித்து யிரக்கிவடித்துவைத்துக்கொண்டு குழந்தைகளுக்கு காலையொருவேளை மாத்திரம் உ - துட்டிடையாக ௩-நாள் அல்லது௫-எ-நாள்ஆக கொடுக்கவும் சுழிகணத்தைசேர்ந்த சகலவியாதியும் தீரும் பத்தியம்கார்க்கவேண்டும் புளிசுட்டும் உப்புவறுத்தும் கூட்டுவது உத்தமம் வென்னீர் பரிமாருதல்வேண்டும் தாயார் மாங்காய் தேங்காய் மொச்சைபூசினி வெல்லம்கடலை மாவினால் செய்த உருண்டைகள் கேழ்விரகின் அமுது பழயது பகல்நித்திரை அதிகநடைமுதலான அவபத்தியங்கள்செய்யக்கூடாதென்றறிக.

## கெர்ப்பகணத்தின் குணம்.

உண்டாம்கர்ப்பகணங்கேளு உத்தசுவாசமேலெழும்பி
தண்டாயிருமல்மிகவுண்டாம் தண்மைநெஞ்சுவாய்மட்டும்
தொண்டைநாவுமேவெந்து சோரும்பொருமிவயருப்பும்
வண்டார்முலையுங்குடியாது வகையாய்முகமும் நாறுமென்றேன்.

## கெர்ப்பகணத்திற்கு

## எண்ணெய்.

விளக்கெண்ணைகால்படி-துளசிச்சார்கால்படி-நிலத்துளசிச்சார் அரைக்கால்படி-இத்துடன்-கஞ்சாங்கோரைமாசிப்பத்திரி-வில்வஇலை-வெங்காயம்-இவைசமமா யெடுத்திடித்துசார்பிழிந்து அறைப்படியெடுத்துமுன்சார்யெண்ணையுடன்கலந்து திரிகடுகுவ றுத்திடித்து சூரணித்து இரண்டுவிராகனிடை அத்துடன்கலந்து அடுப்பேற்றி கடுகுபதத்தில் இரக்கிவைத்துக்கொண்டு இரண்டு காசிடைகொடுக்கவும் தாயாரை முந்தியதினமே பத்தியமாகவைத்து இந்தஎண்ணையை-ரு-நாள் கொடுக்கவும். (ஒரு-வரு[illegible]ய) குழந்தைகளுக்கு எ-நாள் கொடுக்கவும் - தாய் இச்சாபத்தியம்.

## மஹாகணத்தின் குணம்.

முகம்புரங்காலுங்கையும் - மோதியேமினுமினுக்கும்
நகைவிழிவெளுப்புகாட்டும் நஞ்சுண்டாப்போல் மயக்கும்
மிகமிகவெதுப்புமுண்டாய் வெடித்துநாஉதடும் புண்ணாய்
சுகமில்லா வருத்தந்தோன்றும் சொல்மஹாகணத்தின்வாறே.()

## மஹாகணத்திற்கு குடிநீர்.

சிறுகிரைவேர்-விஷ்ணுகாந்தி-கீழாநெல்லி - சிறுபூளைஎருமு ட்டை பீனாரி-சீந்தில் - ஆடாதோடை - இவைசமமாய் யெடுத்தி டித்து ஒருபாண்டத்திட்டு - இளம் வறுப்பாய் வறுத்து - சற்று இடித்து - ௪ - படிஜலத்திலிட்டு கால்படியாகக் காச்சி இறுத்து - ஒருநாள் முழுதும் குடிநீராகக் கொடுக்கவும் - இப்படி - ௩ - நா ள்கொடுத்துவர - மஹாகணத்தின்குணம் விலகும் - தாயும் சற்று ஜாக்கிரதை யாக இச்சாபத்திய மிருக்க வேண்டு மென்றறிக.

## எரிகணத்தின்குணம்

அருசீராசிரியவிருத்தம்.

பாயில்கிடக்க ஒட்டாது பதைத்தேயெரிவும் மிகவுண்டாம்
வாயில்மூச்சுபரிந்துவிடும் வாயில்உமிநீர் வடிந்துவிழும்
நோயில்பட்டுமிக அழுகும் நோக்கும்கீழேமுகம்சாய்க்கும்
ஆயுள்வேத வயித்தியருக் கறைந்தோமிதுதான்எரிகணமே. (௬௨)

## எரிகணத்திற்கு எண்ணெய்.

தென்னங்குறும்பை சார்உழக்கு - தகரைச்சார்உழக்கு பழ ம்பாசிச்சார் உழக்கு - வெங்காயச்சார்உழக்கு - கத்தாழைச்சார் உழக்கு - நுணாயிலைச்சார்உழக்கு - அலரியிலைச்சார்உழக்கு விள க்கெண்ணெய் அரைப்படி யாவும்ஒன்றுபடுத்தி அடுப்பிலேற்றி ஏலம்-இலவுங்கப்பட்டை - கோஷ்டம்-சீரகம்-சந்தனம் - அதிம தூரம்-வகைக்கு (கவ)-விராகனிடையெடுத்து யிளநீர்விட்டறைத் து வெண்ணெயுடன்கலந்து யெரித்துமெழுகுபதத்தில்யிறக்கி கா லையில் ஒருகாசிடையாக - ௩-நாள்-டு-நாள்-எ-நாள் கொள்ளவும் அ-விதகணங்களும் நீங்கும் பத்தியம்.

[*]

## பிரளிகணத்தின்குணம்.

கஅஞ்சீராசிரிய விருத்தம்.

மிகுத்தபிரளிகுணத்தியல்பை விரிக்கக்கேளும்செருக்கறவே
விருத்தமாகவயறுவிம்மி மேலேயேப்பமுண்டாகும்
சுகித்தஉடம்பெல்லாம்நொந்து துடித்தேயேங்கியழுதலறும்
பகுத்தமலமும்மாப்போலே பாக்கக்கழியுந்தவித்திடுமே. (சுங)

போதாபிரளிகுணங்கேளாய் பொருமிவயறுவீஅதப்படையும்
கோதாமலமும்போகாது குடலைப்புரட்டிதான்வலிக்கும்
மாதாமுலையும்உண்ணுது வலிவைக்குலைக்கும்வாயுலரும்
மீதாமேல்மூச்சுண்டாகும் விழியும்சுழலும்மேசித்தம். (சுச)

வெண்பா.

சித்தாயினைக்கும் திட்டுதிட்டெனமுக்கும்
முத்தாகமூக்கில் நீர்மூண்டோடும்தெத்தாரம்
மஞ்சட்படராமணக்கும் மதிவதன
வஞ்சிப்பிரளிகுணமாம். (சுரு)

## பிரளிகணத்திற்கு எண்ணெய்.

அவித்த சித்தாமணக்கெண்ணெய்-க-படி பழகின பாண்டத்தில்விட்டு அடுப்பேற்றி - ஆற்றுதும்மட்டிக்காய் நாலு ஈரவெங்காயம் படி - க-இவையிரண்டும் உரலிலிட்டு இடித்து யெண்ணெயில்கலந்து காச்சவும் (உ௫) விராகனிடை கருஞ்சீரகம் - (உ௫) விராகனிடை கடுகுரோகணி இவைகளைப் பொடித்துப்போட்டு மெழுகுபதமாய்காய்ச்சி வைத்துக்கொண்டு காலையில் துட்டிடை அல்லது - கரண்டிவீதம் கொடுக்கவும் பேதியாகும் மேற்கூறிய வியாதிகள்யாவும் தீரும். பத்தியமிருக்கவும் மீன்இரச்சி தள்ளவும்.

# பிரக்கணத்தின்குணம்.

தாக்கான பிரக்கணத்தின் குணத்தைக்கேளு
தளராதசெய்வலிதான் தளரும்நூல்போல்
தூக்குமேபலபேதி பச்சென்றேதான்
தோய்ந்ததயிர்போலவுமாம் வயறூதும்
தூக்கமிகும்பாலருந்தும் கக்கும்கண்டாய்
சொரிகிவிழிக்கால்கைகள் சில்லென்றேதான்
ஏற்கையிலேதலைப்புரட்டல் குணங்கள்கண்டால்
இயல்பானபிறக்கணமென் றியம்பலாமே (௬௬)

## பிரக்கணத்திற்கு

## எண்ணெய்.

வல்லாரை கோழியாவரை - கஞ்சாங்கோரை - ஜானகிப்பூண்டு - வேளையிலை ஒற்றைப்பேய்மிரட்டி - இரட்டைப்பேய்மிரட்டி சிறுபுள்ளடி இவையாவும் சமனாகக்கொண்டுவந்து இடித்து (௨)-படி சாறுபிழிந்து அந்த சாற்றுக்குசமமாக சித்தாமணக்கெண்ணைசேர்த்துவெங்காயம் - கருஞ்சீரகம் - வசம்பு -இதுகள்வகைக்கு - உ-விராகனிடை பொடித்துப்போட்டு மெழுகுபதமாய்காய்ச்சி வைத்துக்கொண்டு - காலையில்-ஒருகாசிடையாக மூன்றுநாள்கொடுக்க பிறக்கணத்தின் சேட்டைகள்யாவும்தீரும் பத்தியமும் முன்போலக்காற்கவும்



## வரட்கணத்தின்குணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

நெஞ்சதுதுடிக்கும்புகைந்திருக்கும்நிறமும்வேறாய்நாக்கருக்கும்
வஞ்சம்அறவேஒருவேளை வந்தேசரீரமெலாம்வெதுப்பும் [ம்
மிஞ்சும்இருமல்வயற்றிறைச்சல் விட்டேத்திடமாய்துரும்பெடுக்கு
மஞ்சார்குழலாய்வரட்கணத்தின் வாறுமிதனையறிவாயே. (சுஎ)

அஸ்தியில்சுரமுந்தோன்றும் அழுகும்நீர்தாகமாகும்
முற்றியேசிறுநீர்தானும் முறுக்கியேவெண்மைகாணும்
சற்றுதான்வயறுநொந்து சடுதியில்கடுப்புகாணும்
வற்றிடும்சரீரமெங்கும் வரட்குணமென்றுசொல்லே. (சுஅ)

நாக்கில்மஞ்சள்வெள்ளைமுள்ளு நடுவேவெடிப்புமூன்றுகும்
பார்க்கப்பிள்ளையீடழியும் பருக்காதுடலும்இளைத்துவிடும்
மூக்கில்சளியும்இருமலுடன் முகமும்மஞ்சள்பூத்திருக்கும்
தூக்கமிகவேமயக்கமுண்டாம் சோரும்வரளின்குணமிதுவே. ()

## வரள்கணத்துக்கு
## எண்ணெய்.

ஆமணக்கெண்ணை- நாழி-பசம்பால்நாழி - இத்துடன்-கீழா நெல்லியின்சார் அரைக்கால்படிவிட்டு அடுப்பேற்றி - மதுரம்-கடுரோகணி - தான்றிக்காய் சுக்கு-விஷ்ணுகராந்தைவேர் - கடுக்காய் - துளசி-தூதுவளை - பசரை- வசைக்கு - அரைக்கால்பலமாக எடுத்து இளநீர்விட்டறைத்து ஷை எண்ணெயில்கலந்துமெழுகுபதமாய்காய்ச்சி யிறக்கி இரவில் அன்னம்உண்டபிறகு கண்டிவீதம்குடித்து உறங்கிவிடில் காலையில் பேதியாகும் இப்படி ங-நாள் கொடுக்கவும் முன்போல்பத்தியம் காக்கவும்.

## ஊதுகணத்தின்குணம்.

எண்சீராசிய விருத்தம்.

காதுடன்கண்ணுடம்பு கனக்கவேவீங்கிவற்றும்
போதவேநாவும்புண்ணாய் பொருந்திபசுரமுண்டாகும்
வேதுகைகாலும்சோர்ந்து வெருத்திடும்அன்னந்தன்னை
ஊதுநற்கணமீதென்று உறைத்தனர்முனிவர்தானே. (எ௰)

### ஊதுகணத்திற்கு
### மருந்து.



நீர்முள்ளி ஒருபிடி கொண்டுவேந்து சாம்பலாகக்கருக்கி கையாந்தகரை சார்விட்டு குழம்பாய்கறைத்து நாய்வேளையிலையை ஒருபிடிஅறைத்து அத்துடன்கிளரி சூரியபுடம்வைத்தெடுத்துஒருசங்குமுலைப்பாலில் ஒருகாசிடை யிம்மருந்தைப்போட்டு கலக்கிவார்க்கவும் இப்படி யிருவேளையும் மூன்றுநாள் கொடுக்கவும் இச்சாபத்தியமா யிருக்கவும் ஊதுகணத்தின்குணம் நீங்கும்.

---

### கொதிப்புகணம் (௰அ) கணச்சூடு-அஸ்திசுரம்
### அஸ்திவெட்டை-பித்தவெட்டை
### மேகம்-வரண்ட தேகம்
### இதுகட்கு
### கற்றாழை எண்ணெய்

சித்தாமணக் கெண்ணெய் (க) படி-எலுமிச்சம்பழச்சார்-மிலந்தைச்சார்-ஈரவெங்காயச்சார்- இம்மூன்றும் வகைக்கு (கால் படி) இவையாவும் ஒன்றாய் கலந்து அடுப்பேற்றி-கருஞ்சீரகம்-அபிற்பட்டை இதுகள்-வகைக்கு-கால்பலம்-ஏழுதண்ணீர் விட்

கெழுகின கருங்கற்றாழைச்சோர் (க) பலம்-யாவும்வெண்ணெயி ல்போட்டு - கற்றாழைசோர் சிவக்குமட்டும்காச்சி- யிரக்கிவைத் துக்கொண்டு - நாளொன்றுக்கு (ற) கரண்டிவீதம் - அந்தி-சந்தி யாக-ரு-டு-எ-நாள் கொள்ளவும் - கடுகு-நல்லெண்ணெய் - சூடும் வாய்வான பதார்த்தங்கள் நீங்கலாக பத்தியமிருக்கவும்-ஷை-வி யாதிகள் யாவுமசூரியனைக்கண்டபனிபோல் நீங்கும்.

## வீக்ககணத்திற்கு

## எண்ணெய்.

வசம்பு-பூண்டு-ஓமம்- அதிமதுரம் - கோஷ்டம்-கிராம்பு-சு க்கு-மிளகு-ஏலம்- மூக்கொற்றிப்பூண்டு-வகைக்கு விராகனிடை யாக எடுத்துபொடித்து வஸ்திரகாயம்செய்து கால்படி விளக் கெண்ணெயில் போட்டுகலக்கிசூரிய புடம்வைத்து மைத்தாநாள் முதலாக-சிறுகரண்டிவீதம்-கொடுக்க - பிள்ளைகளுக்குண்டான வீக்ககணம்தீரும்-இச்சாபத்தியம்.

## அந்தகன்கணத்தின்குணம்

உச்சிமூளைதனைப்பற்றி உடலம்யெங்கும் வெளுப்புண்டாம்
மிச்சமாகநாவுலரும் விழிகளிரண்டும் வெளுப்பெய்தும்
பச்சைமஞ்சளது போலே பசும்பொன்னிறமாய்முகமினுக்கும்
அச்சம்புரியுமுலையாளே அந்தகன்கணமென்றறைவாயே. (எக)

## அந்தகன்கணத்திற்கு

## மருந்து.

பொன்னாங் கண்ணி-சிறுகீரை-நீர்பூலா-அவுரிவேர்-தேற்றா ன்கொட்டை-கடுக்காய்-வகைக்கு (க) பலம் எடுத்து ஒன்றாயிடி த்து ஆவின்வெண்ணையில் புறட்டிகெச்சக்காய்வீதம் உள்ளுக்கு கொடுக்கவும்-அம்மருந்திற்றானே கொஞ்சமெடுத்து முலைப்பால்

விட்டு கலந்து தலையில் அப்பிவைக்கவும் - உலர்ந்தவுடன் - மறுபடியும் தலையில்அப்பிவைக்கவும் இப்படிமூன்றுநாள் - தலையில் அப்பிவைத்து உள்ளுக்கும் தின்னக் கொடுக்கவும்

## மந்தாரகணத்தின் குணம்.

மந்தாரகணத்தின்வாறு வகையரிந் திடவேகேளு
மூர்ந்தியகணத்தின் மாந்தமூதியேயிசைந்துகூடில்
சந்தியில்சுரமபக்கும் சார்ந்திடும் சுவாசம்வாங்கும்
கந்தியே வயிறுஉப்பும் கணத்தினில்மாந்தமாமே. (எ௨)

### மந்தாரகணத்திற்கு எண்ணெய்.



நாயுருவிச்சாறு-கரசலாங்கண்ணிச்சாறு-வல்லாரைச்சாறு கவுதும்பைச்சாறு-கண்டங்கத்திரிச்சாறு-நொச்சிச்சாறு - வகைக்கு (கால்படி) விளக்கெண்ணெய்படி (௪) வெள்ளைப்பூண்டு - சுக்கு-திப்பிலி-மிளகு-கடுக்காய் - தான்றிக்காய் - நெல்லிக்காய்-இவையாவும்-ஒருபலம் - லவுங்கம்-உ-விராகனிடை- வசம்பு-உ-விராகனிடை• இதுகளையிடித்து வஸ்திரகாயம்செய்து சாறுவகை யெண்ணெய்பாவும் ஒன்ருய்கலந்து அடுப்பேற்றி யெரித்துநீர்வற்றிகடுகுபதமாகும்சமயத்தில் இரக்கிவைத்துக் கொண்டுஉச்சிக்கரண்டிவிதம்சாப்பிடவும் கடும்பத்தியம்.

## ஆமணக்கத்தின்குணம்.

இதுவேசீதகணமுமாம்.

ஆமகணத்தின்குணங்கேளு அடவடவாகவெதுப்பாது
ஜாமந்தோரும்வெதுப்பிநிற்கும் தண்ணீர்உழலையுண்டாகும்
சேமத்துடலமிகவிளைக்கும் சிறியமூகும்பசியில்லை
காமந்தனரும்பிதுதானும் கடுங்கியிருக்கும்கண்டாயே. (எ௩)

சுழிக்கும்பொருமும்வயிறிழியும் சுவாசமிகவும்உண்டாகும்
கழுத்தைநாணிக்கால்குளிர்ந்து கண்ணைமூடிவிழியாது
அழுத்தமானசுரந்தோன்றும் அயர்ந்துசீறிதிடுக்கென்னும்
சுழிக்கும்ஆமகணமென்று சொன்னார்அரனார்தோகையர்க்கே. ()

## ஆமகணத்திற்கு

## எண்ணெய்.

இண்டம்வேர் - இண்டந்தண்டுச்சார் - உழக்கு நிலக்குமிழ் மாசிப்பத்திரி - புங்கம்-நிலத்துளசி - வெங்காயம் - முடக்கொத்தான்-தூதுளம்சார் - நுணாயிலைச்சார் - வகைக்குஉழக்கு சார்பிழிந்துக்கொண்டு இத்துடன்எண்ணெய் ஒருபடிவிட்டு அடுப்பேற்றி ஜாதிக்காய் - கிராம்பு-ஏலம்-கடுகுரோகணி-கடுக்காய் - வால்மிளகு-சுக்கு - ஓமம்-வசம்பு- வகைக்கு அரைபலம்-யெடுத்திடித்து அறைத்து எண்ணெயில்கலக்கிக் காச்சிகடுகுபதத்தில்இறக்கி-கரண்டிவீதம் (௫) நாள்கொடுக்கவும் அந்தியில் நிலத்துளசியிடித்து பிட்டிட்டு அந்தகியாழத்தை சாயாட்சைகொடுத்துவரவும் இச்சாபத்தியம் வாய்வானபண்டங்கள் ஆகாது மேற்கூறிய ஆமகணத்தின் சேட்டைகள் தீரும்.

## நீர்கணத்தின் குணம்.

தண்ணீரும்சீதத்தோடே தான்பச்சைமஞ்சளாகி
கண்ணீரும்பீளைபாய்ந்து கடுப்புடன்வலித்துசோரும்
உண்ணீரும்முத்துப்போலே ஓடவேகழந்துதாகில்
தெண்ணீரும்நீராமத்தை எவருளார்தீர்க்கவல்லோர். ([illegible])

## நீராமகணத்திற்கும் சீதகணத்திற்கும்.

### நெய்.

நெய்பழகியசட்டியை அடுப்பில்வைத்து கன்றுய்காய்ந்தபி றகு - எலிமிச்சங்காய்பிரமாணம் பசும்நெய்யை அந்தசட்டியிலி ட்டு உருக்கி-மணித்தக்காளியிலேயை அறைத்து கொட்டைப்பா க்குபிரமாணம் அதிற்போட்டு ஊறியிளம்பதத்திலிரக்கிஆரவை த்து சிறுபிள்ளையாகில் அரைகாசிடைகொடுக்கவும் சற்றுபெரிய பிள்ளையாகில் துட்டிடைகொடுக்கவும் இப்படி ஐந்துநாள் கொடு க்கநீங்கும் இதன்றியும் இதனடியில்வரும் பேராமகணத்திற்கு கூரியமருந்து கொடுத்தாலும் உத்தமந்தான்.

## பேராமகணத்தின் குணம்.

கையுமேகால்குளிர்ந்து கண்களும்வெளுமாகும்
குய்யமேசுராமுங்தோற்றும் குடித்தபால்வாந்தியாகும்
துய்யவேதிடுக்கிட்டேங்கும் சோர்ந்துதான்வயிறுபோகும்
பொய்பலகேளாயிந்த பேராமகணத்தின்வாறே. (௭௬)

பேராமகணமேகேளு பொருமிடும்வயிறுதள்ளும்
கோரகவயிறுபோகும் நெற்றியில்வலிப்புதோற்றும்
சீராகமூலேயுண்ணுது சீறியேவெருவிப்பார்க்கும்
கார்குழல்தனத்தினளே கணடதிக்குணங்கள்தானே. (௭௭)

### பேராமகணத்திற்கு

### மருந்து.

தும்பை - பொடுதலைவேர் - வேலிப்பருத்தி-சமயிடையாய் கொண்டுவெந்தசட்டியிலேபோட்டுவேகவைத்துஎருமைமோர்நா ழிவிட்டு கொஞ்சி-வேல்-திப்பிலி - சீரகம்-முக்காற்பலம்போட்டு வெந்தபிறகெடுத்து அறைத்து பூரம்-க-விராகனிடை லிங்கம் - க-

விராகனிடை பொடித்துப்போட்டு மறுபடியும் அடுப்பேற்றிக்இ ண்டிவைத்துக் கொண்டு கழற்சிக்காய்பிரமாணம் -ரு-நாள் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## முக்குகணத்தின் குணம்.

சோகமாய்நாக்குவெந்து சுரமுடன்தலையும்நாணி
தாகமாய்வயிற்றைப்பற்றி தான்சீதம்ரத்தம்விழும்
மாகமாயுருப்புதள்ளி மாரட்டப்படுமேயாகில்
தோகையேகேளாய் முக்குகணமென்றேநீ சொல்வாயே. (எஅ)

கக்குமுலையுமுண்ணுது காலுங்கையுங்குளிர்ந்திருக்கும்
சொக்கும்உடலும்கண்சோறும் சொரிந்துமலத்தின்ரத்தம்விழும்
நிற்கும்கடுக்கும்ஆசனவாய் நெருப்புப்பட்டாப்போலெரியும்
முக்குகணத்தின்குணமிதென்று மொழிந்தோமிதனைப்பாராயே.

உதிரமாய்கழிதலன்றி உலாவியேசுரமுங்காயும்
சதிரமெல்லாம்நடுக்கும் சந்துகால்வலியுண்டாகும்
முதிரவேசீதங்காணும் முக்கியேஅடியுந்தள்ளும்
மதியுடன்அரியவல்லோர் வைத்தியரென்னலாமே. (அ0)

கொள்ளமுக்குக்குணங்களின்னம் குழந்தைநாவுமிகவெந்து
தள்ளாச்சுரமும் தலைவலியும் தாகமுடனேநாவரட்டும்
மெள்ளவயற்றுக்கடுப்புடனே மேனிக்கறுத்துஆசனமும்
விள்ளஇரத்தமாய்விழுந்து வீணில்தேகம்வற்றுமன்றே. (அக)

### முக்குகணத்துக்கு எண்ணெய்.

வில்வம் - விலாமிச்சு - விஷ்ணுகாந்தி - கோரைக்கிழங்கு-ஒரிதழ்தாமறை - முருங்கைவித்து - துளசிவிரை - கொன்றைப்பிசின் - ஆவாரைப்பிசின் - கோஷ்டம்-அதிமதுரம் - அக்கிராகாரம்-தாளிசப்பத்திரி - இவையெல்லாம் தனித்தனியாய் வறுத்தி

டித்து ¬ வகைக்கு ஒருபலம் எடுத்து விளக்கெண்ணெய்படி-(க) கற்றாழைசார் (வ)-படி மூலைப்பால்(வ)-படி எலிமிச்சம்பழச்சார் படி (அரிக்கால்) ஷையெண்ணை சாறு இடித்தசூரணம் யாவும்ஒன் ருய்கலந்து அடுப்பேற்றி கடுகுபதம்வருமட்டும் காச்சிபிரக்கிது ட்டிடையாக மூன்றுநாள் காலையில்மாத்திரம் கொடுக்கவும்.

கொஞ்சம் சீரகம்பொரிக்கவிட்டு இண்டந்தண்டு சிறுதுண் டுகளாக நாலுதுண்டுதறித்து கும்பியில்சொருகியெடுத்து சீரகத் துடன்போட்டு கால்படி தண்ணீர்விட்டு எட்டொன்ருய் காச்சி மாலையில் கொடுக்கவும் காலையில் எண்ணையும் மாலையில் இந்தகி யாழமுமாக (௩)-நாள் அல்லது (௫)-நாள் கொடுக்க ஷை-மூக்கு கணங்கள்யாவுந் தீருமாம் கடுகுநல்லெண்ணை வாய்வும் சூடுமான பதார்த்தங்களாகாது.

## மூக்குகணத்திற்கு வேறு மருந்து.

கற்றாழைசோறெடுத்து ஏழுதரம்ஜலம்விட்டு அலம்பியெடு த்து கத்தியால் கொத்தடமிட்டு பின்னக்காய்பிரமாணம் சட்டியி ல்போட்டு அத்துடன் அரைக்காற்பலம் வெங்தயத்தை பொடி செய்துபோட்டு எலிமிச்சம் சார்விட்டுகாய்ச்சி சிவந்தபதத்தில் பிரக்கிகொஞ்சங்கொஞ்சமாய்குழந்தைகளுக்குகொடுத்து வாமு க்குகணமாந்தம் நீங்குமாம்.

## மூலம் வருமாறு.

கலிவிருத்தம்.

பாரும்சிசுவதை பாவத்தைசெய்தபேர்
ஆருமரியவேயாஞ் சொல்வோங்கேளீர்
நீரும்அபானத்தில் நின்றுபொரிகொண்டு
சேரும்மூலத்தில் சூடுவுண்டாகுமே. (அஉ)

உண்டானவிந்து ஒடுங்கியொளிந்துபோம்
திண்டான * மூவரும் திகைத்திட்டுநிற்பார்கள்
கண்டோமதுவென்றால் காட்சியநீதமாம்
நன்றானமூலமும் நாசமதாகுமே. (அகூ)

* மூவரும்-வாத-பித்த-சிலேத்துமம்

## மூலம் - (கூ) - க்கும்.

### குளிகை.

பூரம்-தாளகம்-மனோசிலை-வெண்காரம்-கல்னாரு- இவைஐந்தும் சமஇடையாய்எடுத்து ஒருபலமாக நிறுத்துகொடிக்கள்ளியிலைச்சார்விட்டு மெழுகுபோல் அரைத்து வழித்துக்கொண்டுகுகையிலிட்டு மேலோடுமூடி சந்துவாய்தெரியாமல் தளமாக மண்சீலைசெய்து கோழிபுடம்போடவும் ஆறியபின் எடுத்து கல்வத்தில்இட்டு ஆவின்பாலால் ஒருசாமம்அரைத்து கள்ளிபாலால்ஒருசாமம் அரைத்து கையாந்தகரைசாற்றால் ஒருசாமம் அரைத்து எலுமிச்சம்பழச் சாற்றால் ஒருசாமம் அரைத்து சோற்றுகற்றாழை சாற்றால் ஒருசாமம் அரைத்து குன்றிமணிபிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்திவைத்துக் கொள்ளவும் நித்தம் ஒருகுளிகையாக நாற்பத்துநாள் கொள்ள எண்பதுவிதமூலமும் நீங்கிவிடும் ஐந்துபிராயத்துக்குமேல்ப்பட்ட பிள்ளைகள்முதல நூறுவயதுமுதல் சாப்பிடலாம். மேற்கூறிய ஐந்துசரக்கும் முறைபாடியே சுத்திசெய்து கூட்டவும்.

பூரத்தை - வெற்றிலைமிளகும்-இடித்துகியாழமிட்டு அதில் கிளிக்கட்டி தொங்கவிட்டு மூணுநாள் பொறுத்தெடுக்க சுத்தியாகும்.

மனோசிலையை சீமைகாடியில் கிளிக்கட்டி - (௩)-நாள் ஊறவைத்து எடுத்துக்கொள்ளவும் சுத்தி-கல்னார் - கழுதை மூத்திரத்தில் மூன்றுநாழிகை ஊறினபின் கழுவியெடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

தாளகத்தை - சிறுதுண்டுகளாகநறுக்கி-மொந்தைக்குடுவை யில்போட்டு மேலேஓடுமூடி அர்த்தஒட்டில் மூணுதுலாரும் செய்து கரிநெருப்பின்மீது வைத்து குழையினால் ஊதிக்கொண்டிருக்கவும் முதல்கறுப்புப்புகைவரும் பிறகுசிகப்புப்பு கைவருகையில் யெடுத்துக்கொள்ளவும் சுத்தியாம்.

வெண்காரம்-காடியிலாவது பழச்சாற்றிலாவது அரைத்து வில்லைதட்டிஉலர்த்தி பாகுபொரித்து யெடுத்துக்கொள்ளவும்.

## மூலகணத்தின் குணம்.

அறுசீராசிரிய விருத்தம்.

சோத்தமுமேகழிந்து தினமும்ஆசனங்கடுத்துவேயும்
மீதுகாச்சல்வயிற்றுவேச்சல் விடாததலைநோய்அதிகமுமாம்
காதப்படவேமுகமினுக்கும் கருக்கும்சிவக்கும்பலவிதமாய்
ஓதும்உருப்புமிகத்தன்னும் உரைத்தோம்மூலகணமென்றே. ()

மூலகணத்திற்கு

கிருதம்.

அதிவிடையம் - கடுக்காய்-சுக்கு - பரங்கிச்செக்கை கசகசா விளாமிச்சு - சந்தனத்தூள் - ஜாதிப்பத்திரி - நெல்லி - சித்தாமுட்டி - செம்பருத்தி-வில்வவேர் - வகைக்கு பலம்-(க)- யிடித்துச் சூரணம் செய்துவைத்துக்கொண்டு - (ரு) - பலம் பசும்நெய்யை அடுப்பிலேற்றி இரண்டுபலம் கற்கண்டுபொடித்துப்போட்டு யெரித்து பாகுபதமாய் கொதித்துவருகையில் ஷை-சூரணத்தைகொட்டி - சீரகம்-க-பலம் போட்டு கிளரிவருகையில் கிருதமாகும் இரகிவைத்துக்கொண்டு பாக்களவாக இருவேளையும் ஏழுநாள் கொள்ளவும் இச்சாபத்தியம் யிருக்கவும் மேற்கூரிய மூலகணத்தின் வியாதிகளனைத்தும் தீரும்.

## மூலகணத்திற்கு வேறு மருந்து.

——(*)——

பழம்பாசிச்சமூலம் கொண்டுவந்து வெள்ளாட்டுப் பாலில் போட்டு நன்றாய்வெந்தபின்பு ஷி-கோதுநீக்கி எலிமிச்சம்பழச் சார் கொஞ்சம்விட்டு கிண்டுகையில் குழம்பாகத்தயிருவரும் அதையிறுத்து அரையாழாக்குவீதம்-ந-நாள் குடித்துவருகையில் மூலகணம் தீரும்.

## மூலகணத்திற்கு வேறுவித மருந்து.



கருவேலன் பட்டையை இடித்து கியாழம்வைத்து தெளி வாயிறுத்து அதிமதுரம் - சீரகம்-ஏலம்-வகைக்கு துட்டிடையெ டுத்து இடித்து வஸ்திரகாயம்செய்து அந்தகியாழம் அடுப்பிலி ருக்கும்போதே போட்டிறக்கி கொடுக்கவும் மூலகணந்தீரும்.

இதுவுமது.

பெருமரத்துப் பட்டையை வெள்ளாட்டுத் தயிரிலரைத்து கரைத்துக்கொடுக்கத் தீரும்.

இதுவுமது.

பருத்திப்பிஞ்சும் - சீரகமும் அரைத்து பசும்பாலில் கரைத்துக்கொடுக்கவும் தீரும்.

## மூலரத்தகணவிஷமாந்தத்திற்கு எண்ணெய்.



விளக்கெண்ணெ படி-(க)- கற்றாழைச்சார் - எலிமிச்சம்பழச்சார் ஈரவெங்காயச்சார் - வகைக்கு கால்படி-பசும்பால் - அரைப்படி - இவையாவும் ஒன்றுபடுத்தி வைத்துக்கொண்டு - கோஷ்

டம்-அதிமதுரம் - சண்பகப்பூ - ஏலம் - சன்னலவுங்கப்பட்டை வகைக்கு - கால்பலம்இடித்து வஸ்திரகாயம்செய்து வெந்தயம்-ஒருபலம் - மெழுகாக அரைத்துகலக்கி அடுப்பேற்றி சிறுதீயாக வெரியவிட்டு மெழுகுபதத்தி லிறக்கிவைத்துக்கொண்டு - காலை ஒருவேளையாக சிறுகரண்டிவீதம் -ரு-எ-நாள் கொடுக்க மூலாத்தம் - கணம்-விஷகணமாந்தம் தோஷம்முதலாக நீங்கிவிடும் இச்சாபத்தியம்.

## மூக்கல்வயிற்றுக்கடுப்பின் குணம்.

### கலிவிருத்தம்.

சீதரெத்த சிலேட்டுமம் போலவே
தாதுவற்றியே தாகமிகுத்திடும்
ஓதுகண்ட மலத்திலுறுங்குறி
வாதமுக்குவயற்றுக் கடுப்புகாண் (அரு)

## மூக்கல் வயிற்றுக் கடுப்பிற்கு மருந்து.

பருத்திப்பிஞ்சு - ஜாதிக்காய்-கிராம்பு - அதிவிடையம் அரத்தை-ஓமம் - இலந்தங்காய் - வகைக்கு சமமாயெடுத்து தயிரில் அரைத்து - தயிரிற்றானே கரைத்துக்கொடுக்க மூக்கல் வயிற்றுக்கடுப்பு நீங்கும்.

## மூலக்கடுப்புக்கு எண்ணெய்.

வெந்தயம் பலம் - (ய) - கிலக்குமிழிவேர்-உ-பிடி விளக்கெண்ணெய் - படி-(க)-வேரைமாத்திரம் அரைத்துக்கூட்டி அடுப்பிலேற்றி வெந்தயம் வெந்தபிறகுயிரக்கி - காலையில் ஒருகரண்டிவீதம் - எ-நாள்கொடுக்க மூலக்கடுப்பு நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்.

## இரத்தக்கடுப்பு - அடிபிரப்பட்டதற்கு வெந்தியக்களி.

—(*)—

வெந்தியம் ஒருபலம் (உ)-படி பசும்பாலில் வேகவைத்துயி ரக்கி - வெல்லம்போட்டு கருகாமலும் கும்பாமலும் களிபோல் கிண்டி - கெச்சக்காய்பிரமாணமாக அந்திசந்தி யிருபோதும் தி ன்றுவந்தால் ஷை - வியாதியும் அதிசாரபேதியும் நீங்கும்.

## சீதக்கடுப்பு-நீர்சுருக்கிற்கு மருந்து.



தென்னம்பாளை யிளசியாகக் கொண்டுவந்து மேற்பாளைநீக் கி உள்ளிருக்கும் கொத்துகளையிடித்து ஆழாக்குசார் பிழிந்து ஆழாக்கு பசுந்தயிரும் ஆழாக்கு எலிமிச்சம்பழரசமும் ஒன்றாய் கலந்து மூன்றுநாள் இருவேளையும்கொள்ள நீர்சுருக்குமாறிடும் பத்தியம் புளிப்பாகாது.

## கிராணி கடுப்பிற்கு மருந்து.



ஒருபிடிவெந்தியம் எலிமிச்சம்பழ ரசம்தளரவிட்டு வேக வைத்து இருபோதும் தின்னவும் இப்படி மூன்றுநாள் கொள் ளவும் நீங்கும்.

## சகலவித கடுப்பிற்கும் குளிகை.



அதிமதுரம் - அதிவிடையம் - பெருமாத்துப்பட்டை மாத ளம் பிஞ்சு-மாங்கொட்டைப்பருப்பு - விளாம்பிஞ்சு-வில்வப் பி

ஞ்சு-சீரகம்-குராசாணிஓமம் - தேங்காயின் உள்ளிருக்கும்பூ - ஜாதிக்காய்-மருக்காரைவேர் - இவையாவும்- சமயிடையாயெடுத்து அவ்விடைக்கு - சரியாய்துளசியிலே யெடுத்துக்கொண்டு கல்லுரலிலிட்டுஇடித்து கல்வத்தில்வைத்துகஞ்சாவின்சார் விட்டறைக்கவும அல்லது கஞ்சாவை வேகவைத்து கியாழம்இரக்கி அதினுல் அறைத்து ஜாதிக்காய்பிரமாணம் உருட்டி ஆழாக்குபசுந்தயிரில் கொடுக்கவும் சகலகடுப்பும் நீங்கும் இச்சாபத்தியம்.

---

## சீழ்மூலத்திற்கு

## மருந்து.



சென்னயுரிவியிலே ஒருபிடி - அறைத்து-உழக்கு நல்லெண்ணயில் கலக்கி வரிவரியாயிருக்கும் கற்றாழைமடல் சோற்றை ஏழுதண்ணிவிட்டுகழுகி ஒருபிடியும் - சக்கரை ஒருபிடியும்போட்டு அடுப்பேற்றி - சோறுசிவக்குமட்டும் காச்சியிரக்கி கரண்டிவீதம் (ரு)-நாள் (எ)-நாள் தின்னவும் சீழ்மூலம் நீங்கும்.

---

## இரத்தகணத்தின் குணம்.

இடைவிடாமுக்கிமுக்கி இருமலுமழிச்சலுண்டாம்
அடைபடாகழிச்சலாகி அடிக்கடிரத்தங்காணும்
தொடையிடைவலிக்குந்தாக்கும் சொல்லொணசுரமுங்காயும்
தடைபடாவியாதியென்று சாற்றினர்முனிவர்தானே. (அசு)

நாடிஅயர்ந்துவுளம் வாடிப்பெற்றசபதி
கூடியுணவுசிக்க ஓட்டாதுகுழந்தைகட்கு
ஓடியரத்தமதில் மலமும்சேர்ந்துள்மூலமதால்
சாடிக்கும்ரத்தகணமெனவே முனிசாற்றினரே. (அஎ)

## இரத்தகணம் மூலகணம் அதிசாரத்திற்கும் மருந்து.

—(*)—

வில்வவேர் - கருவேலன் கொழுந்து-எலுமிச்சம்விதை-சீரகம் - ஆவாரம்பூ - ஏலரிசி - ஜாதிக்காய் - ஜாதிபத்திரி-கிராம்பு-இவைசமயிடையா யெடுத்துயிடித்து வைத்துக்கொண்டு முலைப்பாலில் அறைத்து கொட்டைப்பாக்கு பிரமாணம் கொடுக்கவும் ரூ-நாள் ஆறுவேளையில் தீரும்.

## அடித்தள்ளினதற்கு மருந்து.

கரிசலாங்கண்ணியிலை - ஒருபிடி-பழம்புளி-அரைபலம்இரண்டும் நெகிழஅரைத்து புன்னைக்காயளவு-எ-நாளைக்கி கொடுக்க வெளிகண்டிருந்த அடியுள்ளுக்கு வாங்கிக்கொள்ளும் இச்சாபத்தியம்.

### வேறு மருந்து.

ஒருதலை வெள்ளைப்பூண்டு - வசம்பு-வகைக்கு (உ)பலமெடுத்துபஞ்சுபோல் நருக்கிவைத்துக்கொண்டு-வீழியிலை-பொடுதலையிலை-சிறுபுள்ளடியிலை-வகைக்குஒருபிடியெடுத்துபொன்வறலாய் வறுத்துப்பொடித்து முன்மருந்துடன்கலந்து (கால்படி) விளக்கெண்ணெயில்போட்டுகலந்து காச்சிமெழுகுபதத்தில் யிரக்கிஉச்சிக்கரண்டிவீதம் ஒருநாளைக்கி மூன்றுவேளையாக மூன்றுநாள்வார்க்கில் வெளிகண்டிருக்கும் ஆசனம் உள்ளுக்கடங்கும் சகலகணங்களும் தணியும்.

## அடிதள்ளினதுடன்
## இரத்தங்கண்டால் மருந்து.

கனத்திருக்கும் இஞ்சியை மேலபாணிசீவி இரண்டங்குல நீளத்தில் துண்டித்தெடுத்து சிரியதுவாரம்செய்து இரண்டுவிரா கனிடை பெருங்காயத்தை உள்ளேபொதித்து இஞ்சியால்பாணி யடைத்து (கால்படி) எருமைத்தயிரில்போட்டு அடுப்பேற்றிவே கவைத்து யெடுத்து வேறோதயிர்துணியில மூட்டைகட்டி நீர்வ டிந்தபிறகெடுத்து வேகவைத்தெடுத்த இஞ்சிக்குத்தகுந்த தயிர் விட்டு நெகிழஅரைத்து உள்ளுக்கு கொடுக்கத் தீரும் இப்படி ந-நாள் கொடுக்கவும்.

## அடிதள்ளினதற்கு புகை.

வெள்ளைகுங்கிலியம் (கவ) பலம்யெடுத்து இரண்டாய்பாகி த்து ஒருபாகத்தை கல்வத்திலிட்டுசுன்னம்போல்நெகிழப்பொடி த்து (சு) பாகமாகபாகித்து ரு-நாளைக்கிருவேளையும் வெண்ணை யில்குழைத்து உள்ளுக்கு கொடுக்கவும் முன்பாகித்திருக்கும் ஒ ருபங்கை பெரும்பொடியாய் இடித்து உரலில்வரட்டியில் நெரு ப்புபோட்டு அதில்இந்தப் பொடியைதூவி குழந்தையை உரலி ன்மேல் குந்தவைத்து ஆசனத்திற்கு புகைகாட்டவும் இப்படி ரு-நாளும் உள்ளுக்கும் கொடுத்து புகையும்காட்டிவர ஆசனம் உள்ளுக்கடங்குவதுடன் இரத்தம் வருவதும் சொஸ்தப்படும்கா ரமில்லாமல் சாப்பாடுகொடுக்கவும்

## சகலகணத்திற்கும்
## எண்ணெய்.

செப்புநெரிஞ்சல் - சிறுபுள்ளடி - சிறுஅம்மான் பச்சரிசி- தகரைவேர் நரிபயிற்றங்கொடி அகத்திப்பட்டை வெள்ளைப்பெ ருங்காயம் - வகைக்கி கழச்சிக்காயளவு அறைத்தெடுத்து அரை க்கால்படி - விளக்கெண்ணையில் கலக்கி(க)-நாள் சூரியபுடம்வை த்து தட்டிடைபிரகாரம் ரு-நாள்-ருி-நாள் கொடுக்கசகலகணமு ம் தீரும் மூக்கல்தீரும் நோய்க்கு தக்கவாறு கடும்பத்தியம் அல் லது இச்சாபத்தியம் வைக்கவும்.

உ

# கரப்பான்வகுப்பு.

## (மஅ) கரப்பான்களின் பெயர்.

செங்கரப்பன் அனல்கரப்பான் தானும்மண்டை
சிரங்குபண்ணும் அரிகரப்பான் பொரிகரப்பான்
அங்கமதி லெழுகரப்பான் தானுமிக்க
அளராம உதிகரப்பான் கட்டியோடு
பொங்கமாய்வீங்கிய கரப்பானுந்தான்
புகலரியசட்டைதடி வெடிகரப்பான்
சிங்கமுகஎரிகரப்பான் வாதபித்த
சிலேட்மததோடே கரப்பான்பதினெட்டாமே (அஅ)

## வாதகரப்பான் குணம்.

திரேகமெங்கும் திமிர்உண்டாகும் சுரங்காயும் தேக்கமான குணங்காணும் சிலவேளை ஊரல்காணும் இதுவாதகரப்பானென்பர்.

## பித்தகரப்பான் குணம்.

தலைவலிகாணும் சுரமடிக்கும் தினவுண்டாகும் தேகம்சிவந் தசிரங்காணும் உஷ்ணமதிகரிக்கும் வாந்திவரும் சிறுநீர்சிவந்தி ருக்கும் மலம்சிக்குபடும் இதுபித்தகரப்பா னென்பர்

## சேட்டுமகரப்பான் குணம்.

வாயைச்சுற்றி உள்ளும்புரம்புமாக சிரங்குபோல் கிரந்தியுண்டாகும் மண்டைவலிகாணும் மணிக்கட்டுகளில குடைச்சல் போல புடைக்கும் இதுசேட்டும கரப்பானென்பர்.

## இங்ஙனம் கூரிய
## மூவிதகரப்பானுக்கும் எண்ணெய்.

புங்கம்பிலை - ஆதண்டையிலை - வேளையிலை - சங்கங்குப்பி யிலைவகைக்கு- ஒருபிடிகொண்டுவந்து புதுவசம்பு-பூண்டு-இரு சேங்கு - பொடுதலேயிலை - கஸ்தூரிமஞ்சள் விரைபோக்கியகடுக் காய்வகைக்கு கால்பலம் (அரைப்படி) வெங்காயம் இவையாவு ம் கல்லுரலிலிட்டு அத்துடன் (அரைப்படி) விளக்கெண்ணெவி ட்டு கெட்டப்பாறையினால் பஞ்சுபோல் இடித்து பிழிந்துக்கொ ண்டு சங்கம்குப்பிசாறு தனியாயிடித்துபிழிந்து (கால்படி)சாறு ஷை எண்ணெயுடன்கலந்து சூரியபுடம் ஒருநாள் முழுதும்வைத் து மறுநாள்முதல் காசிடைவீதமாக குழந்தைகளுக்கு இடமரி ந்து-௩-௫-எ-நாள் கொடுக்க எவ்விதகரப்பானும் விட்டோடிப் போம் பத்தியம் சுட்டபுளி-வறுத்தஉப்பு - கூட்டவும்

## கரப்பானுக்கு வேறுவித
## எண்ணெய்.

சித்தாமணக்கெண்ணெ(கால்படி) பூவரசங்காயும் பூவுமாகப றித்துவந்திடித்தசாறு(கால்படி) சிலந்தமணத்தக்காளிசாறு(கால் படி) கத்தாழைசாறு (அரிக்கால்படி) யாவும்ஒன்றாய் கலந்துக் கொண்டு கருவாப்பட்டை - ஏலம் - சிவதைவேர்- பூதகரப்பான் பட்டை - இவைவகைக்கு-உ - விராகனிடைகடைசரக்கையிடித் து சூரணித்து கலந்துவைத்திருக்கும் சாறுவகையுடன்போட்டு அடுப்பேற்றி கடுகுபதமாய் காச்சியிறுத்துகொண்டு - காலையில் துட்டிடையாக மூன்றுநாள் உள்ளுக்குகொடுத்து கடுகையெடு த்து ரிணங்களின்மேலும்பூசவும் எவ்விதகரப்பான் ரிணங்களும் ஆறிவிடும் தேகம்சவுக்கியப்படும் பத்தியம் கலிச்சு-பூசினிக்காய் என்ணு - கொள்ளு-எருமைப்பால் - நெய்-இவையாகாது தாயார் மிகவும் ஜாக்கிரதையாக யிருக்கவேண்டியது ஷை-பத்தியம் தாய் க்கும் பிள்ளைக்கும் இவ்வாறே.

## கரப்பானுக்கு மேல்பூசும் தனிமருந்து

பூதகரப்பான்பட்டை - பூவரசம்பட்டை - நுணாப்பட்டை - இலுப்பைக்கட்டி - கருப்பான்பட்டை- இவைசரிபிடையாய்சேர்த்து சுட்டுசாம்பலாக்கி நல்லெண்ணெயில் குழைத்து கரப்பான் ரிணங்களின்மேல்தடவ ஆறிவிடும்.

## செங்கரப்பான் குணம்.

அறுசீர்-விருத்தம்.

—(*)—

சித்தால்சேளீர்செங்கரப்பான் சிரசுவலிக்கும் மேல்சிவக்கும்
அத்தால்வெடிக்குமீரோடும் அணங்கேமூர்த்திரமலங்கட்டும்
மத்தால்அங்கமிகமெலியும் மாணக்குறிகளதுகண்டாய்
ஒத்தக்கிரிகைவகைதானும் உரைப்பேன்-ஒ-ஒ-ஒண்ணுதலே. ()

## செங்கரப்பானுக்கு நெய்.

பசும்நெய் - கால்படி - ஆதண்டையிலை - முதியார்கூந்தல்- முருக்கிலை - ஆனைநெருஞ்சில் - பால்கொத்தான் - அரசங்கொழுந்து - சின்னியிலை-வெங்காயம் - வகைக்கி ஒருபிடியாக உரலில் போட்டுஇடித்து பாலுடன்போட்டு அடுப்பேற்றி சிவக்கக்காச்சி யிறுத்துக்கொண்டு காலையில் ஒருகரண்டிவீதம் குழந்தைகளுக்குகொடுக்க-ந-டு-நாளில் தீரும்.

## கருங்கரப்பான் குணம்.

அரியக்கேளுகருங்கரப்பான் அழுகுங்குழவியுடல்வெதுப்பும்
செரியுமுலையுமுண்ணாது தேகமிரமும்வெவ்வேறாய்
கரியமேனிபசுநரம்பு கதித்தேகாட்டும்பாபாத்து
முரிக்கிமிகவுந்துள்ளிவிழும் முகமும்பாதம்வீங்கிடுமே. (கூ)

## கருங்கரப்பான் முதலிய-(௰அ) கரப்பானுக்கும் எண்ணெய்.



மிளகு-கடுக்காய்-கோஷ்டம் - திப்பிலி-கருஞ்சீரகம்-ஓமம் கஞ்சாங்கோரை - நத்தைச்சூரி - ஆவாரை-சிவனார்வேம்பு - உத்தாமணி வகைக்கு - (அரைபலம்) வீதமாகயிடித்து (அரைப்படி விளக்கெண்ணெயில்) போட்டு அடுப்பேற்றி கடுகுபதமாய்காச்சிவடித்து காலையில் கரண்டிவீதம் — ரு-நாள்-எ-நாள்கொடுக்க (௰அ)-கரப்பானும் ஓடிப்போகும் கடும்பத்தியம்.

## அரிகரப்பான் குணம்

### வெண்பா.



உற்ற அரிகரப்பான் ஓதக்கேள்ஒண்டொடியீர்
பற்றிலிங்கயோனிபுத்துவந்தாடும்புண் சத்தமாய்
ஆராமல்புண்கரைக்கும் ஆஆ உருவழிக்கும்
மாரதுயிக்குணத்தின வாறு. (கூக)

### அரிகரப்பானுக்கு எண்ணெய்.

கொட்டைக்கரந்தைவேர் - செருப்படைவேர் - அவுரிப்பட்டை - பசலையிலை-சதைக்கரண்டிவேரின்பட்டை - மிளகருணை-உத்தாமணியிலை கரிசாலையிலை பெருங்களாப்பட்டைவேர் - ஆவாரைவேர் - பொன்னாங்காணிவேர்பட்டை பேய்மிரட்டிவேர்-சிறுகீரைவேர் - ஆடுதின்னாப்பாளையின்வேர் - தொட்டாற்சிணுங்கி இலைவேரின்பட்டை-இவைவகைக்கு(கால்) பலமாகவாங்கி-வசம்பு அரைபலம் அதனுடன்போட்டு இடித்து விளக்கெண்ணெய் (அரைப்படி) அடுப்பேற்றிஷை யிடித்ததுளைப்போட்டு கொதிக்கக்காச்சிபிரக்கிவடித்துக்கொண்டு காலையில் ஒருகரண்டிவீதம் எ-நாளைக்குகொடுக்க அரிகரப்பான் சொரிகரப்பான் உமிர்கரப்பான் செங்கரப்பான் - கருங்கரப்பான் - மண்டைக்கரப்பான் யாவும்விட்டோடிப்போம் தாயார் கடும்பத்தியமிருக்கவேண்டும்.

## பாலகரப்பான் குணம்.

காலதுகடுக்கும்சந்து கழுத்ததுவெடித்துப்புண்ணாய்
ஏலவேகடிவிஷம்போல் இருந்துபன்னீர்போல்பாய்ந்து
கோலமாய்வற்றிநாறும் குழவியும்ஓங்குமாயில்
மாலருங்குழலாய்பால கரப்பான்செய்வாறுதானே. (கூஉ)

அன்றியும்.

விகாரமுற்று தேகமெல்லாம் பறபறத்து சொரிபோலுண்டாகி சாரையின் உடல்போல வேறுபட்டு அச்சிரங்குகளின்வாயில் விஷநீர்கள்கசிந்துக்கொண்டும் ஒருவேளை இரத்தம்போலசிவந்தநீர் வடிந்தும் தசநாடிகளின் பீடமெல்லாம் தடுதடுங்கியும் இக்குணம்காணுமாகில் பாலகரப்பானென்பர்கள்.

50-வருஷத்திய பூவரசம்பட்டைச்சாறு (படி-வ) சித்தாமணக்கெண்ணை (படி-வ) இவ்விரண்டும் ஒன்றுசேர்த்து அடுப்பேற்றி யெரிக்கும்போது கசகசாப்பால் (படி-வ) அத்துடன்விட்டு கலக்கி பெரித்துக்கொண்டிருக்கையில் சீரகம்-கருஞ்சீரகம்-கார்க்கோலரிசி-வகைக்கு-விராகனிடை-௧-லவுங்கம்- சடாமாஞ்சில்-ஏலம் - கரிசாலையிலை - நுணாவேர்-வகைக்கு - விராகனிடை-அ-இவைகிழலிலுலர்த்திசூரணம்செய்து - முந்திஅடுப்பேற்றியஎண்ணையும் சாறுவகையும் திரண்டுகடும்பதமாகையில் இந்த சூரணம்போட்டுகிண்டி இரக்கி நெய்யை வடித்துக்கொண்டு காலையில் ஒருகரண்டிவீதம் - ரு-நாள் - எ-நாள் கொடுக்க பாலகரப்பான் ரோகம் விட்டோடிப்போகும். பத்தியம் புளிப்பு - கசப்பு-மீன்-எள்-கொள் - பாவற்காய்முதலியன ஆகாது இவ்வளவும் தாயார் பத்தியமிருக்க வேண்டியது பிள்ளையையும் அவ்வாறே கார்க்க வேண்டும்.

## சூலகரப்பான் குணம்.

வெண்பா.

பிள்ளைமுகம்வாடி போதம்வெடியங்கமெல்லாம்
சள்ளைப்பொருந்திநவிர்ருமே-மெள்ளக்கேள்
வள்ளல்முழங்கால்கைநொந் தன்னமுண்ணாவொட்டாது
தள்ளுமென்ற சூலைபதுதான். (கூஙு)

## சூலைகரப்பானுக்கு எண்ணெய்.

வடக்கோடியபுங்கன்வேர் - சங்கம்வேர் - ஆதண்டம்வேர்-வகைக்கு ஒருபிடியாககொண்டுவந்து பஞ்சுபோலநறுக்கி(அரைப்படி) விளக்கெண்ணெயில்போட்டு ஆழாக்கு வெள்ளைப்பூண்டு திரி-சிறுகஅரிந்துபோட்டு - கடுகுரோகணி (கால்பலம்) வீதமாகபொடித்துப்போட்டு முடக்கொத்தான்இலை ஒருபிடி அரைத்துப்போட்டு - கடுகுபதமாய்காய்ச்சிவடித்து காலையில் சிறுகரண்டி வீதம் ரு-எ - நாள்கொடுக்க சூலைகரப்பான் விட்டோடிப்போம் ஆனால் எண்ணெய்காச்சியபிறகு க-நாள் சூரியபுடம்வைத்தெடுத்துக்கொள்ளவும் பத்தியம் சுட்டபுளி - வறுத்த-உப்பு கூட்டவும் சூலை-பிடிப்பு-சொறிசிரங்கு வாய்வு சிலகரப்பானும் அகலும்.

## ஊதுகரப்பான் குணம்.

### வெண்பா.

கேளாய்குளிர்காச்சல் கிளரும்கழலைக்கட்டி
மூளாவிதான்போல முயங்கிநிற்கும்-நாள்தோறும்
பூதம்போல்வீங்குவிக்கும் புண்ணுசிழுக்கரிக்கும்
ஊதுகரப்பானின் குணம்.

## ஊதுகரப்பான் முதலாகிய (௰அ)கரப்பானுக்கும் எண்ணெய்.

அகத்தி-கற்பூரவள்ளி-அவுரிவெள்ளறுகு - சங்கங்குப்பி-ஆடாதோடை-மணத்தக்காளி-ஆவாரை-ரங்குமிலை- நிலக்கடம்பு-கிரந்திநாயகம்-வெள்ளைப்பூண்டு-வகைக்குஒருபிடியாக கொண்டுவந்துவெவ்வேறுபிடித்துப்பிழிந்துக்கொண்டு ஆகியசாறுயெவ்வளவிருக்கிறதோஅவ்வளவு விளக்கெண்ணெய்விட்டுஒன்றுபடுத்திமஞ்சள்- மரமஞ்சள்-கஸ்தூரிமஞ்சள்-சிவதை - கடுகுரோகணி

சீரகம்-கருஞ்சீரகம்-கடுகு-வெள்ளைக்கடுகு-திப்பிலி-கடுக்காய்-தான்றிக்காய்நெல்லிக்காய்-வகைக்கு-(௧)-விராகனிடையாகநிறுத்தெடுத்துஇடித்துவஸ்திரகாயம்செய்துமுன்கலந்து வைத்திருப்பதுடன்போட்டு அடுப்பேற்றிகமலாக்கினியாகயெரித்துமெழுகுபதத்தில்இறக்கி வேறேகலசத்தில் வடித்துக்கொண்டு காண்டிவீதம் காலை ஒருவேளையாக மூன்றுநாள் கொடுக்க பதினெட்டுகரப்பானும் விட்டுபயந்தோடிப்போம் கடும்பத்தியம்.

## தொண்ணூற்றாறு கரப்பானுக்கும் நவநாதரெண்ணை.

கரிச்சாலையிலை-திராயர்நிவேர் - கருடக்கொடி - பொரிகாரம்-பூதகரப்பான்பட்டை - வசம்பு - உள்ளி இவைசமனிடையெடுத்து - பேராமணக்கெண்ணையிலிட்டு காச்சிவடித்து ௩-௫-௭-நாள் வீதம்தேகதிடமறிந்து கொடுக்கநிவர்த்தியாகும்கடும்பத்தியம்.

## முன்னூற்றிருபது கரப்பானுக்கும் மும்மூர்த்தி எண்ணெய்.

சிறுகுறிஞ்சான்- மிளகரணை-காட்டுமல்லி - கொடிப்பாலை-இவைகளின்வேர்-வசம்பு உள்ளி-ஆகாசகெருடன்கிழங்கு - ஏலம்-சமன்கூட்டி நிறுத்து எத்தனைபலமிருக்கினும் அதற்கிரண்டிடைவிளக்கெண்ணைகூட்டி காச்சிவடித்து ௬நாள்வீதம் கொடுக்க (௩௱௨௰) கரப்பானும் விட்டோடிப்போம்கடும்பத்தியம். முறியக்காச்சியிறக்கவும்.

## சகலகரப்பான் ரிணங்களுக்குப் மேற்பூசும் எண்ணெய்.

கரப்பான்பட்டை - விடத்தலையிலை - யிலைக்கள்ளி - திருகுகள்ளி - சதுரக்கள்ளி - மாவிலிங்கம்பட்டை-சங்கம்தழை-கும்ம

ட்டி-குப்பைமேனி - பொடுதலை- நிலக்கடம்பு-அவுரி-ஆமணக்கு நச்செடி-நொச்சில்-ஆட்டாங்கொடி - இவைகளின்சார் -சகல முங்கலந்ததுஉழக்கு நல்லெண்ணை-உழக்கு இரண்டுங்கலந்துக் கொண்டு சீரகம் - கடுகு - கோரைக்கிழங்கு - சுக்கு - திப்பிலி-மினகு-தேவதாரம்- வகைக்கு (முக்கால்பலம்) நிறுத்திடித்துவஸ் திரகாயம்செய்து ஷை-யெண்ணையிலிட்டு காச்சியிரக்கி பூசிக்கொள்ளசகலகரப்பான் ரிணங்களும் க்ரிகிரிணங்களும்ஆரிப்போம்.

## ஆராதசிரங்கு கிரந்திக்கு சொரிக்கு கள்ளிச்சாறு.

கொடிக்கள்ளியை பரித்துவந்து வரகுவைக்கலில் வதக்கி சாறுபிழிந்து உ-காசிடையாக குழந்தைகட்கு - ௩-நாள் உள்ளுக்குவார்க்க சொரிசிரங்குகிரந்தி ஜுலையாவும் விட்டோடிப்போம் கமெம்பத்தியமாய் தாயாரும் பிள்ளையுமிருக்கவேண்டியது

## சிரங்கிற்கு தேங்காயெண்ணை.

காட்டுசீரகம்- கார்போகலரிசி- கஸ்தூரிமஞ்சள் ஏலம்-கடுக்காய்-நீரடிமுத்து இவையாவும் சமனிடை இவ்விடைக்கு வெள்ளைமினகுசேர்த்து யாவும்பொடிசெய்து ஊமத்தங்காய்களின் உள்ளிருக்கும் விரைகளைத்தோண்டிவிட்டு அதனுள் இந்தபொடியை அடைத்துசாணமப்பி க-க்கு-உ-வரட்டிவீதம் புடம்போட்டெடுத்து யாவும்ஒன்றாய்பொடித்து நிறுத்து இரண்டிடை தேங்காயெண்ணையில்போட்டு கல்வத்திலிட்டு அறைத்துசூரியபுடம் ௩-நாள்வைத்து எவ்விதசிரங்குகளுக்கும் தடவிவர ஆரிவிடும்.

## சொரிக்கு நீராகாரம்.

பூவரசம்பட்டை க-பலம்-எடுத்திடித்து ஆழாக்கு நீராகாரத்திலிட்டு காலையில் குடிக்கவும் இப்படி மூன்றுநாள் கொள்ள தீரும்.

## பேய்சொரிக்கு மருந்து

இந்துப்பு பொடியாய் அறைத்து போதுமானநெய்யில்கலந்து சூரியபுடம்வைத்து தலைமுதல்தேகம்யாவும்பூசிக்கொண்டுமறுநாள் மிளுப்பைகட்டியைசுட்டு அறைத்து தேய்த்துக்கொண்டு ஸ்நானம்செய்யவும் தீரும்.



உ

வேலுமயிலுந்துணை.

# மாத்திரை அல்லது குளிகை வகுப்பு.

## 1 - வது.

### ஜாதிலிங்கமாத்திரை.

லிங்கம் (அறைபலம்) எடுத்து மூலைப்பால்விட்டு மூணுஜாமம் அறைத்து சிறுபயர்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும் மாந்தசுரத்திற்கு ஆடாதொடைசாத்தில், வாதசுரத்திற்குநொச்சியிலைகியாழத்தில், சேத்துமசுரத்திற்கு குப்பைமேனி பிட்டிட்டகியாழம் அல்லது ஆணுக்கு பெண்சிறுநீரில் பெண்ணுக்கு ஆண்சிறுநீரில் இவ்விதமாக குழந்தையின் திடமரிந்து க-மாத்திரை-உ-மாத்திரையாக ௩-நாள்கொடுக்கவும் உப்பு-புளி-தள்ளவும்,

## ௨-வது.

## பாலசஞ்சீவி மாத்திரை.

சுக்கு- திப்பிலி-மிளகு - வெண்காரம்-லிங்கம்-இவைசமனி டையெடுத்து பழச்சார்விட்டரைத்து சிறுபயர்பிரமாணம் மாத் திரைசெய்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் குழந்தைகள் மாந் தம்கணம்பொருமல் மூக்கல்இவைகளுக்கு நொச்சி-பொடுதலை-தூதுவளை - புங்கு - துளசி-இலைகளின் கியாழத்தில் க-மாத்திரைவீ தம்-உ-வேளைமிடவும் ஷை - வியாதியுடன்சுரம் கழிச்சல்-பித்தம் கிருமிதோஷம் இவைதீரும் புளி உப்பு-சுட்டுகூட்டவும்.

## ௩-வது.

## ஜீவசஞ்சீவி மாத்திரை.

இரசம் - நெல்லிகெந்தகம் - அரிசிதிப்பிலி- வாளம்-சமனி டையெடுத்து சுத்தஜெலம்விட்டு இரண்டுஜாமம் அரைத்து சிறு பயர்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத் துக்கொள்ளவும் மாந்தகியாழமிட்டு க-மாத்திரை காலையில்மாத் திரம் கொடுக்கவும் உப்புமாந்தம் கணமாந்தம் வாதமாந்தம் பித் தமாந்தம் சேட்டுமமாந்தம்முதல் (அ)வித மாந்தம் தீரும் சுட்ட புளி வறுத்தஉப்பு கூட்டவும்.

## ௪-வது

## சுரங்களுக்கு

## பச்சைகற்பூர மாத்திரை

பச்சைகற்பூரம் - லவுங்கப்பட்டை - ஜாதிக்காய்-வசைக்கி-(விராகனிடை-உ)வாளம் (விராகனிடை-சு)குமரிச்சாற்றால் இர ண்டுஜாமம்அரைத்து உளுந்துபிரமாணம் மாத்திரைசெய்து நிழ லுலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும் சக்கரையில் க-மாத்தி ரைகொடுத்தால் மூன்றுமுக்கால் நாழிகையில் ரு-ச-தரம் பேதி யாகி உடனே சுரம்நீங்கிவிடும் இச்சாபத்தியமிருக்கவும்.

5-வது.

## விடாதகழிச்சலுக்கு மாத்திரை.

ஜாதிக்காய் - அதிவிடையம்-ஜாபத்திரி- அபினி-சமவிடையாயெடுத்து - நல்லெண்ணெயில் தோய்த்து அரைத்துப்பணவிடையாக முலைப்பாலில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

6-வது.

## மாந்தசுரத்திற்கு மாத்திரை.

லிங்கம்சளஞ்சி-(ச) திப்பிலி- சளஞ்சி-(க) ஆவின்பால்விட்டு இரண்டுஜாமம் அரைத்து பயாளவுமாத்திரைசெய்து நிழலுலர்த்தி சீசாவில்வைத்துக்கொள்ளவும் இதற்கநுபானம் கரசணுங்கண்ணி - மிளகு நாயுருவிவேர்-பிரண்டைவேர்- வசம்பு-இவைசரியிடையாயெடுத்து சாம்பலாகவறுத்து கருஞ்சீரகம் வெடிக்கவிட்டு கொஞ்சியிலை - ஒருபிடிசிவக்கவறுத்து அரைப்படி ஜலம்விட்டு ஆழாக்கு மெயாழுமாயிரக்கி ஒருபாலடை மெயாழத்திற்கு ஒருமாத்திரை உரைத்து குலிக்கிவார்க்கவும் தீரும் இச்சாபத்தியம்.

7-வது.

## ஊதுமாந்தத்திற்கு பேதிமாத்திரை.

இரசம் - சுக்கு - வெண்காரம் - செந்தகம்-சமயிடையெடுத்து சுத்திசெய்தவாளம் இதற்குசமயிடையெடுத்து குளுந்த தண்ணீர்விட்டு இரண்டுஜாமம் அரைத்து பாசிப்பயர் பிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் க - மாத்திரையைதண்ணீரி லுரைத்துக்கொடுக்கவும் தீரும்வியாதிகளாவனஊதுமாந்தம்பொருமல் வாதம்இவைதீரும் இச்சாபத்தியம்.

## 8 - வது.

## மாந்தபொருமலுக்கு மாத்திரை.

கோரோஜனம் வெண்காரம் - துத்தம் - சமயிடையெடுத்து கஸ்தூரி-பணவிடைசேர்த்து அகத்திசசாற்றில் ஒருஜாமம் கையான்தகரைச் சாற்றில் ஒருஜாமம் அரைத்து மிளகுபிரமாணம் மாத்திரைசெய்து முலைப்பாலில் அல்லதுஓமக்கியாழத்தில் ஒரு மாத்திரைகொடுக்கவும் இச்சாபத்தியம்.

——[*]——

## 9 - வது.

## வில்வாதி மாத்திரை.

பச்சைகற்பூரம்-லவுங்கம் - வால்மிளகு - சிறுநாகப்பூரோகணி - ஏலம்-மாஞ்சில்சுக்கு-சீரகம்-வகைக்கு கால்-விராகனிடைவாளம் (க-விராகனிடை) இவைகல்வத்திலிட்டு பொற்றலைசாற்றினல் ஒன்பதுஜாமம்அரைத்து மிளகுபிரமாணம்மாத்திரைசெய்து இஞ்சி-தேன்-முலைப்பால்இவைகளில்கொடுக்கவும் மாந்தம் கணம் இருமல்பொருமல் ஜன்னிசுரம் இவைகள்தீரும் இச்சாபத்தியம்.

——(*)——

## 10 - வது.

## பாங்கிஷசுரம்முதலிய சிலகாச்சலுக்கு கற்பூரமாத்திரை.

——(0)——

பச்சைகற்பூரம்-கெந்தி-இந்துப்பு-லவுங்கம்-ஜாதிக்காய்- ஜாதிபத்திரி வகைக்கு - விராகனிடை - க-பழச்சார்விட்டு ஒருஜாமம்அரைத்து உளுந்துபிரமாணம் மாத்திரைசெய்து இஞ்சி-அல்லது சர்க்கரையில் கொடுக்கவும் இச்சாபத்தியம் சந்தசுரமும் தீரும்.

——(*)——

## 11 - வது.

## சர்வமாந்தகுளிகை.

பூரம்பலம் (உ) லவுங்கம் - ஏலம் - வசம்பு - சீரகம்-மாசிக்காய்-அதிவிடையம் - வகைக்கு (கால்பலம்) பூரத்தைமாத்திரம்-சுத்திசெய்து கூட்டவும் மற்றசரக்குயாவும் யிடித்து வஸ்திரகாயம்செய்து விஷ்ணுகாந்தி சார்விட்டரைத்து கோத்தமல்லி பிரமாணம் குளிகைசெய்து வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) வேலிவேர் - சுக்கு-வெந்தியம் - வெள்ளுள்ளி-தென்னம்பாளை-வசம்பு - ஓமம் - இதுகள்சமஙிடை யிடித்துப்போட்டுக் கியாழம் வைத்து ஒருபாலடைகியாழத்தில் 1 - மாத்திரை யிழைத்துக் கொடுக்கவும் க-டு-எ- நாள்நோய் அறிந்துகொடுக்க சகலமாந்தமும் தோஷமும்தீரும்.

## 12 - வது.

## கபாடமாத்திரை.

ஜாதிக்காய் - ஜாதிபத்திரி - காயம் - சீரகம்-அதிவிடையம்-கிராம்பு - அபினி - கெஞ்சா - கழற்சிவித்து - வெந்தியம் - குராசானி-ஓமம் - இவைசமயிடையெடுத்து யிடித்து வஸ்திரகாயம் செய்து கெஞ்சாவின்சாத்தால் (ச)ஜாமம் அறைத்து சித்தாமணக்கு முத்துப்பிரமாணம் மாத்திரைசெய்து ங - நாள் காலேமாலே சாப்பிடவும் யெருமைத்தயிரில் 1 - மாத்திரை அல்லது வசம்பு கியாழத்தில் சாம்பிடவும் காரம்நீக்கிபோஜனம் செய்யவும் புளி கூட்டலாம் ஜெலக்கிராணி-வாய்வுகிராணி - மூலக்கிராணி - அதிசாரம்யிவை தீரும்.

## 13 - வது.

## ஷை வியாதிக்கு ஓர்விதகைகண்ட கபாடசூரணம்.

ஜாதிக்காய் - சுண்டவத்தல் - கருவேப்பிலே - ஓமம் - பழய மாங்கா யூருகாயின் கொட்டைபருப்பு நெல்லிவற்றல் மாதளங்

தோல்லெந்தயம் இவைசமஙிடை அல்லதுவகைக்கு (கால்பலம்) யெடுத்து இளம்வறுப்பாய் வறுத்து சூரணம்செய்து வைத்துக் கொண்டு பெருமைத்தயிரில் திருகடிபிரமாணம் போட்டுசாப்பி டவும் இப்படி 1-நாளைக்கு ௩-வேளைசாப்பிடவும் ௩-நாள்வரை யிலும்கொண்டால்மிகனன்று வயிரிரைச்சல்-அதிசாரம்-மூலக்கி ராணி - கடுப்புச்சல் - ஆசனஎரிச்சல்தீரும். காரம்நீக்கி போஜனம் செய்யவும்.

## 14 - வது.

## கஸ்தூரிமாத்திரை.

கஸ்தூரி (விராகநிடை - க) குங்குமப்பூ (விராகநிடை - உ) கோரோசனை (விராகநிடை - ௩) இம்மூன்றும் கல்வத்திலிட்டு மூலைப்பால்விட்டு ஒருஜாமம் அறைத்து குன்றிபிரமாணம் மாத் திரைசெய்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் க-மாத்திரையெடு த்து அந்தயிடைக்கு மூலைப்பால்விட்டிழைத்து நாவில் தீட்டி விழுங்கச்சொல்லவும் (தீரும்வியாதிகள்) விஷதோஷம்- சன்னி மாந்தம் பித்தசுரம் - வாந்தி-பொருமல் - வாய்வு-சீதளம்-இவை தீரும் இச்சாபத்தியம்.



உ

# கண்டாவிழ்தவகுப்பு.

## பாண்டுகாமாலை சோகைக்கு.

எருமைத்தயிர் (கால்படி) ஆவின்சாணிப்பால்-ங-துளிவிட்டு-எ-மிளகு பொடிசெய்துபோட்டு கலக்கிகொடுக்கவும் இப்படி - ங-நாள்காலையில் கொடுக்கவும் இச்சாபத்தியம்-எ-வதுநாள் ஸ்நானம்செய்து வைக்கவும்-அ - வதுநாள் வறுத்தவுப்பு கூட்டவும்.

## மஞ்சள்காமாலைக்கு

அதிமதுரம் - சங்கன்வேர் - சமயெடைதூக்கி பழச்சார்விட்டறைத்து பசும்பாலில் கறைத்துக்கொடுக்கவும் அல்லது கிழாநெல்லி மணத்தக்காளி சமயிடையறைத்து தயிரில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## பிள்ளைகள் பெருக்க

தண்ணிமிட்டாங் கிழங்குச்சார் - வெள்ளாட்டுப்பால் - தேங்காய்ப்பால் - பசும்நெய்-வகைக்கு (கால்படி) கற்கண்டு (ரு)பலம்பொடிசெய்துபோட்டு அடுப்பேற்றி சிறுகயெரித்து பாகுபதத்திலிரக்கி காலையில்கரண்டிவிதம் கொடுத்துவரவும் இச்சாபத்தியம்.

## சாம்பல்-மண்-தின்கிறகுழந்தைகட்கு மருந்து.

கிழாநெல்லிவேர் - விராகநிடை-க கடுக்காய்தோல் - விராகநிடை-உ முளகு-விராகநிடை-ங-புளித்தமோரில் அறைத்து-ங நாள் கொடுக்கவும் தீரும்.

## ரத்தகழிச்சலுக்கு

கலைமான்கொம்பு சீவினபஸ்பம் அரைவிராகனிடை பசும்பால் கால்படியில்போட்டு நன்றாய்காய்ச்சி-க-எலுமிச்சம்பழச்சார்விட்டு கலக்கிகொடுக்கவும்.

## பேதிகண்டால்

புளியாரை - வாழைப்பூ - சமயிடையெடுத்துயிடித்து பிட்டாயவிழ்த்து தேன்குத்தி பிசைந்துகொடுக்கத் தீரும்.

## மலஜெலம் கட்டினல்

இலைக்கள்ளியின்வேர்பட்டை-ரு-பலம் சுக்கு-மிளகு - உள்ளி-வளைக்கி (கவ) பலம் காயவைத்திடித்து வஸ்திரகாயம்செய்துவைத்துக்கொண்டு குழந்தைகள்பலமறிந்து முலைப்பாலிலாவது வென்னீரிலாவது (க) காசியிடை கொடுக்கவும்.

## முக்கல்வயிற்றுக் கடுப்புக்கு.

பரித்திப்பிஞ்சு- ஜாதிக்காய்-கிராம்பு-அதிவிடையம்-சன்னருஷ்டகம்-ஓமம்-இலந்தை-சரியிடையாய் நெகிழஅரைத்துகெச்சக்காய்பிரமாணம் தயிரில்கலந்து கொடுக்கவும்தீரும்.

## பருக்கள்உடைய

—(*)—

திராட்சப்பழத்துடன் சமமாக ஆட்டுக்கொழுப்பு சேர்த்து அரைத்து பருக்களின்மேல் தடவவுடையும்.

## சயித்தியத்திற்கு

—(*)—

திப்பிலியை பொடிசெய்து பச்சைவெத்திலைசாறும் தேனும்சமமாய்கூட்டி குழைத்து உள்ளுக்குகொடுக்க சயித்தியம்கோழைசுரம் முதலியதும் தீரும் வயிற்றிலுள்ள புளிப்புநீங்கி மலம் உடையும்.

## வாய்நீர்வொழுகலுக்கு.

தான்றிக்காயைசுட்டு சூரணமாக்கி சமஎடை சக்கரைசேர்த்து நித்தம் 1-விராகனிடையாகயெடுத்து I-பாலடைவென்னீரில்போட்டுக்கொடுக்க வாயில்அதிகநீர் ஒழுகல்நீங்கும் கண்கள் நன்றாய்தெளிவுபெறும்.

## சொரிசிரங்குகளுக்கு

அரைப்படி நல்லெண்ணெயில் ஒருபிடி செந்தாழம்பூவின் யிதழ்களைபோட்டு பூமிபுடமாக (௨௰) நாள்புதைத்து பிரகெடுத்து தேகத்திற்பூசிவர மேகரிணங்கள் சொரிசிரங்கு தினவுபடைகள்தீரும் தேகம்சுத்தியாகும் அவயவங்களுக்கு வலிவுதரும்.

## சர்பத்து.

—(*)—

தாழம்பூசெடியின்வேர் கியாழமிட்டு அதிற்சக்கரைசேர்த்து சர்பத்துபோல்காச்சி சாப்பிட்டுவந்தால் ஷை குணங்கள்கொடுக்கும் குழந்தைகள் தணிந்துவளரும்

## அம்மைகாணுதிருக்க

தாழம்பூவின் உள்ளேயிருக்கும் வீபூதியையெடுத்து அதற்கறைபங்கு வெள்ளைசக்கறைசேர்த்து அம்மைகாணுத பிள்ளைகளுக்கு மாதம் I-க்கு 3-5-நாள்வீதமாக அந்தந்தமாதம்முதலில் திருகடிபிரமாணம்கொடுத்துவர யெவ்விதஅம்மையும் காணுது அப்படி அம்மைகண்டாலும்நாலுஐந்துமுத்துகளுக்கு அதிகமாய் காணமாட்டாது.

## ரிணங்களார

—(*)—

தாழம்பூ சுட்டசாம்பலை ரிணங்களின்மீது அப்பிவைத்து மாலையில் இலுப்பைக்கட்டியைசுட்டு குளிக்கவும்இப்படி3-5-நாள்செய்ய ரிணங்கள்ஆரிவிடும்.

## தலைசிரங்கிற்கு.

சவுக்காரத்தை ரோஜாப்புவெண்ணெயில் அரைத்து பிள்ளைகள் தலைசிரங்கிற்பூசிவர ஆரிவிடும்.

## உதிரபேதிக்கி சாந்தி

1-விராகனிடை அபினியை முலப்பாலிலரைத்து சீலையில் தட்டிதிரிதிரித்து ஆசனதுவாரத்தில் சொருகிவைக்க உதிரபேதி உதிரக்கடுப்பு நீங்கும்.

## கண்சிவப்பு மாற

குன்றிமணிப்பிரமாணம் அபினி ஆதற்குசரிபிடை குங்குமப்பு இரண்டும் கோழிமுட்டை மஞ்சள்கருவினால் இழைத்து கண்ணில்தடவ கண்சிவப்புமாரும்.

## நெருப்புசுட்ட ரிணம்ஆர

மட்டிப்பாலும் ரோஜாப்புவெண்ணெயும் சேர்த்தரைத்துப்பூச குழந்தைகள்தலைப்புண்ணும் நெருப்புபட்ட ரிணங்களும் ஆறும்.

## கருநதேமலுக்கு

மருதோன்றியிலையுடன் சவுக்காரம் சேர்த்தரைத்துப்பூச கருந்தேமல்படைகள் நரம்பிழுப்புகால் நோய்இதுகள் தீரும்.

## மயிர்கறுக்க

—(*)—

குாத்துமிலாவிரை பச்சையாக கொண்டுவந்து அத்துடன் மருதோன்றியிலை சேர்த்தரைத்து பூசிவர மயிர்கறுத்து சீக்கிரமாகவளரும்.

## வாதசுரக்கியாழம்.

(*)

சித்திரமூலம் - சிற்றரத்தை - சிறுகாஞ்சொரி - சிறுதேக்கு கெச்சக்காய்பருப்பு - சங்கன்வேர் - கண்டங்கத்திரி-பற்பாடகம்-பேராமுட்டி - விஷ்ணுகாந்தி-நன்னாரிவேர் - வெள்ளறுகு-இவைகள் வகைக்கி (வ)பலம் யெடுத்து கல்லுரலிலிட்டு பஞ்சுபோல் நருக்கி 2-படிஜெலம்விட்டு (முக்கால்) படியாகசண்டக்காச்சியிரக்கிவேளைக்கி (அரிக்கால்படி) வீதம்-காலைமாலை மூன்றுநாள்சாப்பிடவும் தீரும். அல்லது

## ஷை வாதசுரத்திற்கு வாதகுலாங்தகமாத்திரை.

கோரோஜனை - வீராகநிடை - உ௦ - குங்குமப்பூ - வீராகனிடை - உ௦ - பச்சைகற்பூரம் - வீராகனிடை - உ௦ - கோறைக்கிழங்கு - தேவதாரம்-சிறுதேக்கு - சிறுகாஞ்சோரி - சீந்தில்தண்டு - நன்னாரிவேர்-லவுங்கம்-லவுங்கப்பட்டை - ஜாதிபத்திரி-அதிமதுரம் - கோஷ்டம்-பேய்ப்புடல்-சுக்கு-சித்தரத்தை - ஓமம்-வாய்விளங்கம் - இவை (௰௬) திறுசுகளும் வகைக்கி (உ) வீறாகனிடையாகவாங்கி யாவும் ஒன்ருகக் கல்லுரலிலிட்டு கெட்டப்பாறையினால் யிடித்து சூரணமாக்கி மெல்லியசீலையில் வடிக்கட்டி வஸ்திரகாயம் செய்தெடுத்து கல்வத்திலிட்டு மலைத்தேன்விட்டு ஒருஜாமமாட்டி பிரகுமுன்கூரியுள்ள மூன்றுவகைமருந்துகளையும்போட்டு திரும்பவும் (உ)ஜாமம் அறைத்து குன்றிப்பிரமாணம் மாத்திறைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் சுரத்திறுடையகரோத்தையரிந்து ௫-நாள் எ-நாள் இருவேளையும் பனவெல்லத்தில் ஒவ்வொருமாத்திறைவைத்து சாப்பிடவும் நீங்காதவாதசுரம் நிவர்த்தியாகும் (பத்தியம்) கடுகு-நல்லெண்ணை-புளி - தயிர்-பால்-மிரச்சி-சீதளபண்டங்கள் பொடிபுகைலாகிரியாகாது மூன்றுநாள் மருபத்தியங்கார்க்கவும் பிரகுகாச்சியயெண்ணை - கொதிக்கவைத்தசீக்காய் தனியேஆரின வென்னீர் விட்டு ஸ்தானம்செய்யவும் மூன்றுமாதம் வறையில் ஸ்ரீபோகம் கூடாது.

## இதுவுமது.

## சுரகுலாந்தக சுருக்குமாத்திரை.

லிங்கம்-பலம்-௳-நாபி-பலம்-௳-வாளம்-பலம்-௳-இவைகளை கல்வத்திலிட்டு நிம்பப்பழச்சாற்றால்(௪)ஜாமமாட்டி குண்டுமணி பிரமாணம்மாத்திரைசெய்துநிழலிலுலர்த்திசீசாவில்பதனம்பண்ணவும் வேளைக்கி ஒருமாத்திரையாக-௧-௩-நாள் ௬-வேளையும்இஞ்சிச்சாற்றி லிழைத்துக்கொடுக்கவும் கடுகு-நல்லெண்ணை - புளி-புகை ஆகாது.

### இம்மருந்தை கூட்டும்

### விவரம்.

லிங்கத்தை - முழுகும்படியாக முலைப்பால்விட்டு மூன்று நாள்ஊறவைத்து யெடுத்துக்கொள்ளவும் அத்துடன்காரந்தபாலில் ஊறவைக்கவேண்டியதுபிரகெடுத்து இஞ்சிச்சார் குப்பைமேனிச்சார் யெலிமிச்சம்பழச்சார் இவைசரியிடையாய் கலந்து(௧) ஜாமம் சுருக்குக்கொடுத்தலிங்கம்உபயோகப்படுத்த வேண்டியது நாபியை மேலபாணியை மெத்தெனசீவிவிட்டு ஆவின்பாலில ஒருஜாமம் வேகவைத்தெடுத்த நாபியை உபயோகப்படுத்தவேண்டியது. வாளத்தைசாணிப்பாலில கொதிக்கவைத்துமேலோடு தட்டி பருப்புகளை பிளந்துமுளைநீக்கிவிட்டு புளிமுளகாய்-உப்பு ௩-ம் கரைத்து அதிற்போட்டு அடுப்பேற்றி ௧-நாழிகைகொதிக்கவைத்தெடுத்த வாளப்பருப்பைஉபயோகப்படுத்த வேண்டியது வெண்காரம் - பலம்-௳-மிளகு-பலம் - ௳-திப்பிலிபலம்-௳.

## சுரநாச கெவுரிகுளிகை.

கெவுரி - கெந்தி - தாளகம் - பால்துத்தம் - துருசு - நாபி- வகைக்கி (ஒருகளஞ்சி) நிறுத்தெடுத்து மிதிபாவைச் சார்விட்டு உ-ஜாமம் ஆட்டி சிறுபயர்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவிலடக்கம்செய்யவும் இஞ்சிச்சாற்றில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் மூன்றுவேளைகொடுக்க வாதபித்த சிலேற்பனசுரம்யாவும் நீங்கும் கடும்பத்தியமிருக்கவும் பச்சரிசி கஞ்சி புகட்டினால் நலம். நாபி - துத்தம்-துருசு-இவைகளை ஆவின்பாலில் கொதிக்கவைத் தெடுத்துக்கொள்ளவும். கெந்தியை- ஆவின்பாலில் - க - நாள்ஊரவைத்தெடுத்துக் கொள்ளவும். தாளகத்தை கல்சுண்ணம்புக்குள்வைத்து பனங்கள்விட்டு தாளித்தெடுத்துக் கொள்ளவும்.

## சுரவைர குக்குடக்குளிகை.

தாளகம் - விருகநிடை-உ - கற்சுண்ணம்பு விருகநிடை-உ- மிளகு - விராகநிடை - உ - இவையாவுங் கல்வத்திலிட்டு குக்குடஅண்டத்தின் வெண்கருவாலாட்டி பரித்திக்கொட்டை பிரமாணம்மாத்திரைசெய்துவைத்துக்கொண்டு சுக்கு-திப்பிலி-மிளகு- மூன்றும் சரியிடைநிறுத்தெடுத்து யிடித்துக்காச்சியகியாழத்தில் ஒருமாத்திரையாக காலைமாலை யிருவேளையும் - ந-நாள் சாப்பிடவும் தாளகத்தைமுன்போல் சுத்திசெய்துக்கொண்டு சேர்க்கவும் பத்தியம் சுட்டபுளி வருத்தஉப்பு சேர்க்கவும்.

## விஷசுர விரணக்குளிகை.

கெந்தகம் - இரசம்-நாபி-கெவுரி-வகைக்கி பணவிடை - க- மிளகு-ம - களஞ்சி இவைகளை ஊமத்தம்சாற்றினால்ஆட்டி குன்றிப்பிரமாணம் மாத்திரைசெய்து எலுமிச்சம்பழச்சாற்றில் க- மாத்திறையாக-ந - நாள் காலையில்மாத்திரம் கொடுக்கவும் கடும் பத்தியமிருக்கவும் அல்லது உப்புநீக்கிய பச்சரிசிகஞ்சி கொடுக்க

வும்மறுபத்தியம் சுட்டபுளி வறுத்தஉப்பு சேர்க்கவும் ஒருமாதம் வரையில் ஸ்ரீபோகம் ஆகாதென்றறிக. முன்கூறியபடி சரக்குகளைசுத்திசெய்து கூட்டவும்.

## மலைச்சுரம் அல்லது
## விஷசுரவேதாள மாத்திரை.

வெள்ளைபாஷாணம் - கெந்தகம்-தாளகம் - இரசம்-வாளம்-பேய்ச்சுரைவிரை - கடுகுருணி - சுக்கு - திப்பிலி-வெள்ளைகாக்கணம்வேர் - சிலதைவேர்-பொன்னுமத்தைவிரை - வகைக்கிவிருகிடை - உ௦-மிளகுப்பலம்-உ௦ - இவைகளை அல்லிப்பூசாற்றில் க-ஜாமம் வேளைச்சாற்றில்-க-ஜாமம் வென்னீரில்-க-ஜாமம்அரைத்து துவரைபிரமாணம் மாத்திரைசெய்து வென்னீரில் க-மாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் ௩-௫-நாள் காலைஒருவேளைகொடுக்க விஷசுரம்யாவும் விட்டோடும் முன்கூறியபடி சரக்குகளை சுத்திசெய்து கூட்டவும்கடும்பத்திய மிருக்கவேண்டும்.

## பலசுரபாஷாண மாத்திரை.

வெள்ளைபாஷாணம் விருகிடை-௫-வீரம்-விருகிடை-உ-பூரம் - விராகிடை-க- திப்பிலி - விராகிடை-உ-மிளகு - விருகிடை-உ - இவைகளை கொடிவேலிக்கியாழத்தினால் ஆட்டியில்லைதட்டி நிழலிலுலர்த்தி யிதிபாலைசாற்றில் க-நாள் ஊரவைத்து மறுபடியும் நிழலிலுலர்த்தி எலுமிச்சம்சார்விட்டு ஒருநாழிகை அரைத்து பயரளவுமாத்திரைசெய்து தேன்-இஞ்சிச்சார் அல்லது திரிகடுகுகியாழத்தில் க-மாத்திரையிடவும் சுட்டபுளி - வறுத்தவுப்பு கூட்டவும்.

## இதுவுமது சர்வசுரகுளிகை.

வீரம்-பூரம் - லிங்கம்-நாபி - கெந்தி-பாஷாணம் - பச்சைகற்பூரம்-கோரோஜனை -(வகைக்கிகளஞ்சியெடுத்து ") அரைபலம் மிளகு ஒன்றிரண்டாய்தட்டி கால்படிஜெலம்வார்த்து கியாழமி

ட்டு காலாழாக்குவருமளவும் பெரித்துவடிக்கட்டிக்கொண்டுஅந்தயிளகைமுன்மருந்துடன் கலந்துக்கொண்டுகியாழத்திற்குசமயிடை எலுமிச்சம்பழச்சார்விட்டு கலந்துமருந்துக்குகொஞ்சகொஞ்சமாய்விட்டு அறைக்கவும் இப்படி (௪)ஜாமம் அறைத்து சிறுபயர்பிரமாணம் மாத்திரைசெய்து வைத்துக்கொள்ளவும் இஞ்சிசுரசம் திரிக்டுகுகியாழம்தேன்-யிதுகளில்-க-உ-மாத்திரையிடவுஞ்சுரம்நீங்கினவுடன் ரு-நாள்-எ-நாள் அல்லது கூ-நாளைக்கு அந்திவேளையில் மிளகுகியாழம் சாப்பிடவும். மாத்திரைசாப்பிடும்போது கடும்பத்தியமிருக்கவும் மறுபத்தியம் உப்புவறுத்து புளிசுட்டுகூட்டவும்

இ து வு ம து.

## சர்வசுரக்குளிகை.

லிங்கம் - நாபி - வெண்காரம்-மிளகு - பெருங்காயம் வகைக்கு (விறகடை-உ) வாளம் (விறகடை-ரு) இவைகளை காட்டுக்கற்றாழை சாற்றினாலாட்டி மிளகளவுகுளிகைசெய்து வைத்துக்கொள்ளவும் இஞ்சிச்சாற்றில் அல்லது பனைவெல்லத்தில் வைத்துசாப்பிட சீதஜுரம் தாபசுரம் வாதபித்தசுரம்குளிர்சுரம் அதிசாரம் இவைதீரும் பத்தியம் புளிநீக்கவும்.

## ஸ்ரீரோகவிரணக்குளிகை.

சீமைரசபற்பம் - சு - களஞ்சி - சீமைபூங்காவி க-களஞ்சி சீமைரசச்செந்தூரம்-க - களஞ்சி ரசகற்பூரம் க-களஞ்சிஇவைகளைபசளைக்கீரையை யிடித்தசாற்றால் (௪) ஜாமமாட்டி குளிர்ந்தஜெலத்தால்ஒருஜாமம்ஆட்டி காராமணியளவு மாத்திரைசெய்து வைத்துக் கொள்ளவும். ஒருமாத்திரையை பனவெல்லத்திலாவது வாழைப்பழத்திலாவது ஒருதுளி சித்தாமணக்கெண்ணெயிலாவது யிழைத்துசாப்பிட மலச்சிக்கல் நீங்கும் கெற்பஸ்திரீகள் வயற்றில்தங்கிய அழுக்குநீங்கும் பித்தவாய்வுஇவைநீங்கும் இச்சாபத்தியம்.



உ

வேலுமயிலுந்துணை.

# பாலக்கிரகதோஷ வருப்பு.

குழந்தைபிறந்த முதநாள்துடங்கி (க) வருஷத்திற்குள்ளாக (காளியென்னும்) பேய்அணையும்.

## அதன்குணம்.

வெதுப்பும் வாந்தியாகும் வயர்கழியும்

## இதற்கு சாந்தி.

அரிசிமாவினல் எருமைசெய்து சந்தனம்தெளித்து எருக்கம்பூ சூட்டி புதுச்சட்டியில் வைத்து குழந்தையை தாயின் மடியி லிருக்கச்செய்து ஷை சட்டியை ஏ-திரம் குழந்தைக்கு சுத்திதிரும்பிப்பாராமல் வீட்டுக்கு வடபாலாகச்சென்று நாலுசந்தும் கூடுமிடத்தில் வைத்துவிட்டு போகிரவன்மறுபடிஅன்றிரவு அக்குழந்தையைபார்க்கக்கூடாது இதனடியிற்காட்டும் சக்கரம்போல் செப்புத்தகட்டில் யெழுதி தாயின்மடிமேல வைத்துக்கொள்ளும்படிசொல்லி அதற்குமேல்குழந்தையைகுந்தவைத்து ஷை சட்டியையேந்தி சுத்திக்கொண்டு போகவேண்டுவது மறுநாள்காலையில்வந்து ரு-விதநூல்சுத்தி குழந்தையிடுப்பில் கட்டவும் அன்றிரவு முழுதும் தலைமாட்டில்வைத்து நித்திரைசெய்யவும்.



## உ-வதுவருடம்.

குழந்தைக்கு இரண்டாவது வருடம்பிறந்தமுதனாள் துடங்கி அந்தஙூ ௰உ-மீ க்குள்ளாக (உத்திரபதி) யென்னும் பேயணையும். +

## அதின்குணம்.

பால்யெடுக்கும் முதுகுகிமிரும் வெதுப்பும் கண்விழியாது பலவிகாரம் செய்யும்

## இதற்குசாந்தி.

ரு-வர்ன்னசாதமும் அரிசிமாவின்அடையும் பொரிபச்சை யெள்ளு - சிவந்தபூ - இதுகள் புதுச்சட்டியில்வைத்து பிள்ளை யைதாயின்மடியி லிருக்கச்செய்து கிழக்குமுகமாய்குந்தவைத்து ஏழுதிரம்சுத்தி படாரிகோயிலண்டை வைக்கவும் மிதவும்மிருட் டபடாதிருக்கும் அந்திவேளையில் செய்யவும்.

முதல்வருடம் சொல்லியபடி தோஷங்கள் சகலத்திற்கும் பரிகாறம்செய்கிரவர் அன்றுயிரவுதிரும்பவர்து குழந்தையைதெ ரிசிக்கக்கூடாது இதைவருஷந்தோரும் கவனிக்கவும்

இந்த எந்திரம் செப்புத்தகட்டில் யெழுதி க-வித நூல்சுத் தி தூபதீபங்கொடுத்து வெள்ளிகுளிசத்தி லடைத்து யிடுப்பில் கட்டவும்.





3-வது வருடம்.

சிசுவுக்கு மூன்றாவது வருஷம் பிறந்தமுதநாள் துடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக (பத்திரகாளி) யென்னும் பேயணையும்.

அதின்குணம்.

வீரிட்டழும் திடுக்கிடும் வாந்திபண்ணும் வயர்கழியும்.

இதற்குசாந்தி.

மாவினால் ஆண்பாவைசெய்து சந்தனம்தெளித்து யெருக்கம்பூ சூட்டி பகல்உச்சிநேரத்தில் குழந்தைக்குசுத்தி ஊருக்கு வடக்கே (௱அ) அடிநடந்துபோய் போட்டுவிடவும் சுடலையிலிருக்கும் விடத்தாரிவேர் பிடிங்கிவந்து இந்தயெந்திரம்போல் தகட்டிலெழுதி ஷைவேரைவைத்து சுற்றி (௩) வர்னநூல்சுற்றி கட்டவும்.





## 4-வது வருடம்.

குழந்தைக்கு நாலாம் வருடம்பிறந்த முதநாள்துடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக (கேச்சுவரியென்னும் பேயணையும்.

## அதின்குணம்.

வீரியழும் - அலரும் - வெதுப்பும்-வயர்கழியும்-வாந்திபண்ணும்-ஒருவிகாரமாய்சோர்ந்திருக்கும்

## இதற்குசாந்தி.

பாலுஞ்சோறு உளுந்துசோறு (ரு) - அரிசி அடை பொரி பலவகைக் கரியும் புதுச்சட்டியில்வைத்து மாதாவின் மடியில் பிள்ளையை குந்தவைத்து தூபதீபத்துடன் ௩-திரம் சுத்திக்கொண்டுபோய் நீர்க்கரையில் வைக்கவும் இந்தயெந்திரம் வெழுதிக் கட்டவும்.



## 5-வது வருடம்.

பிள்ளைக்கு ஐந்தாம்வருடம் பிறந்தமுதலுள் தொடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக கேகடியென்னும் பேயணையும்.

### அதின்குணம்.

உடம்புசுடும் கைகால்சோர்ந்துவிடும் தாகம்தணியாது வயர்கழியும்.

### இதற்குசாந்தி.

அரிசிமாவினல் ஆண்பாவைசெய்து புதுசட்டியில்வைத்து சந்தனம்தெளித்து கோழிபலிகொடுத்து பிரத்தங்காட்டி அந்த பிரத்தத்திலுல் குழந்தைச்கும் பாவைக்கும்திலர்தமிட்டு பாவைக்கு சிவந்தமாலைசூடி சந்திநேரத்தில் குழந்தைக்குசுத்தி ஊருக்குவடக்கே கொண்டுபோய் ஆலமரத்தடியில் வைக்கவும்எருமைக்கொம்பு சீவிவந்து குழந்தைக்கு புகைகாட்டவும்.

காளிகோவிலண்டையிலிருக்கும் அவுரிவேருக்கு கருங்கோழி பலிகொடுத்து முன்சிரங்கா பின்சிரங்கா பொங்கலிட்டு கொண்டுவந்து இந்தஎந்திரம்போல் தகட்டில்கீறி டை வேரை வைத்து குளிசமாடிகட்டவும்.



## ௬-வது வருடம்.

{ குழந்தைக்கு ஆறாம்வருடம் பிறந்தமுதல்நாள் துடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக நீலியென்னும் பேயணையும். }

### அதின்குணம்.

நடுக்கும் - பால்யெடுக்கும் - சுரமடிக்கும் - பலவிகாரஞ் செய்யும்.

### இதற்குசாந்தி.

பச்சைமாங்கிஷம் கொள்ளுப்பருப்பு சாராயம் தூபதீபம் வைத்து மாலைகோத்தில்சுத்தி காளிகோயிலண்டையில் வைக்கவும் நெல்லிமரத்தின் கீழேயிருக்கும் சிறுபுள்ளடியின்வேருக்கு கோழியாவது தேங்காயாவது பலிகொடுத்து வேர்பிடுங்கிவந்து தகட்டில்இந்த சக்காமெழுதி வேரைவைத்து குளிசமாடி ௫-வர்ணநூல்சுத்தி இடுப்பில்கட்டவும்.



## 7-வது வருடம்.

குழந்தைக்கு ஏழாம்வருடம் பிறந்தமுதல்நாள் துடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக (உத்திரகேசரி) யென்னும் பேயணையும்.

## அதின்குணம்.

வயர்சிக்கும் - வெதும்பும்-வாந்திபண்ணும் - உச்சிகுழியும் வயர்வட்டமாய் திரளும்.

## இதற்குசாந்தி.

மாவினால் எருமைசெய்து புதுச்சட்டியில்வைத்து சந்தனம்தெளித்து எருக்கம்பூசூட்டி உச்சிநேரம் நாலுசந்தும் கூடுமிடத்தில் வைத்துவிடவும் கோழியிறகும் வேப்பிலையும்சுட்டு குழந்தைக்கு புகைகாட்டவும்.

சுடுகாட்டிலிருக்கும் அவுரிசெடிக்கி பொங்கலிட்டு பெண்கோழிபலிகொடுத்து வடக்கேபோகிறவேர் பிடிங்கிவந்து செப்புத்தகட்டில் இந்தயெந்திரமெழுதி வேரைவைத்து குளிசமாடி தூபதீபம்கொடுக்கவும்.



## 8-வது வருடம்.

குழந்தைக்கு எட்டாம்வருடம் பிறந்தமுதல்நாள்துடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக (முனி யெண் … பேய்அணையும்.

## அதன்குணம்.

வெ…ப்பும் - வயர்கழியும் - உடம்புபிளைக்கும் - முலையுண்ணுது - ஒருவிகாரமாயிருக்கும்

## இதற்கு சாந்தி.

அஞ்சுவர்ன்னசாதமும் எள்ளும்பொரியும் புண்ணுக்குபொடியும் புதுசட்டியில் வைத்து மாலைநேரத்தில் காளிகோயிலண்டைவைக்கவும்

சிறுபுள்ளடிவேருக்கு தூபதீபங்கொடுத்து உச்சிநேரத்தில் பிடுங்கிவந்து இந்தயெந்திரம் யெழுதிசெப்புத் தகட்டில்வைத்து சுருட்டிஇடுப்பில் கட்டவும்.





## 9-வது வருடம்.

பிள்ளைக்கு ஒன்பதாவதுவருடம் பிறந்த முதல்நாள் துடங்கி அவ்வருடம் (மஉ) மாதத்திற்குள்ளாக (பராபரி) யென்னும் பேயணையும்.

### அதின்குணம்.

தலைபிரட்டும் - வாய்நீர்வடியும் - வயர்கழியும் - கண்மயக்கும் மற்றும்சிலவிகாரம்பண்ணும்.

### இதற்குசாந்தி:

வெள்ளைச்சோறும் வெள்ளைப்பூவும் புதுச்சட்டியில் வைத்து மாலைநேரத்தில் குளக்கரையில்கொண்டுபோய் வைக்கவும்.

காக்கையிரகும் மயிலிரகும் கழுதைவிட்டமும் சுட்டு குழந்தைக்கு புகைகாட்டவும்.

முடக்கத்தான் வேருக்கு தூபங்கொடுத்து பிடுங்கிவந்து இந்த சக்கரம்யெழுதிய செப்புத்தகட்டில்வைத்து சுருட்டி (ரு) விதநூல்சுத்தி இடுப்பில்கட்டவும்.



## 10-வது வருடம்.

பிள்ளைக்கு பத்தாவதுவருடம் பிறந்தமுதல்நாள் துடங்கி அவ்வருடம்(௰௨) மாதத்திற்குள்ளாக (விகாரி) யென்னும் பேய்அணையும்.

### அதின்குணம்.

சிறுவுழலையுண்டாகும் தலைவலிக்கும் நடுக்கும் உண்டஆகாரங்கள் தக்காது முகம்வேறுபடும் திடுக்கிடும்.

### இதற்குசாந்தி.

புண்ணாக்குக்கீரையும் தேனும் நெய்யும் பச்சைமாங்கிஷமும் ஓலைப்பூவும் புதுசட்டியில்வைத்து மாலைநேரத்தில்சுத்தி குளக்கரையில் கொண்டுபோய் வைக்கவும் ஆட்டுமயிரைசுட்டு குழந்தைக்கு புகைகாட்டவும் இந்தயெந்திரம் யெழுதிய செப்புதகட்டுக்கு தூபங்கொடுத்து இடுப்பில்கட்டவும்.



## 11-வது வருடம்.

{ பிள்ளைக்கு பதினோராம் வருடம் பிறந்தமுதல்நாள் துடங்கி அவ்வருடம் (௰௨) மாதத்திற்குள்ளாக (தசரீ)யென்னும் பேயணையும். }

### அதின்குணம்.

கண்வீங்கும்-சோர்ந்துவிழும் - கழுத்துநேர்ந்துவிழும்-தலை நோகிராது - ஆகாரம்வேண்டாது - இவைமுக்கியகுறி இன்னும் பலசேட்டைபண்ணும்

### இதற்குசாந்தி.

பஞ்சவர்ன்னசோறு பச்சைப்பால் பச்சரிசி பலவகைப்பூ இதுகளை புதுசட்டியில்வைத்து மாலைநேரத்தில் சுடலையில் கொண்டுபோய் வைக்கவும். விடத்தாரிசெடிக்கு பெண்கோழி பலி கொடுத்து தாம்பூலம்தட்சணை தூபதீபங்கொடுத்து வேர்பிடிங்கி வந்து இந்தயெந்திரமெழுதிய தகட்டில்வைத்து சுருட்டி குளிசமாடி மூணுவிதநூல்சுத்தி இடுப்பில்கட்டவும்.



## 12-வது வருடம்.

பிள்ளைக்கு பன்னிரண்டாவதுவருடம் பிறந்த முதல்நாள் துடங்கிஅவ்வருடம்(௰௨) மாதத்திற் குள்ளாக (அமுட்டி) யென்னும் பேயணையும்.

### அதின்குணம்.

நாய்போலே கடிக்கும் - உச்சிக்குருகும் - உடம்புகாயும் - புருவம்நெரிக்கும் - தித்திப்புவஸ்து வில்பிரியப்படும்

### இதற்குசாந்தி.

உளுந்துசோறும் தயிரும் புதுசட்டியில்வைத்து மாலையில் காளிகோயிலண்டை வைக்கவும் களாச்செடிக்கு பெண்கோழி பலிகொடுத்து தட்சணைதாம்பூலம் தூபதீபங்கொடுத்து வேர்பிடுங்கிவந்து இந்தயெழுத்துகள் கீரியசெப்புத்தகட்டில் வைத்து சுருட்டிகுளிசமாடிசாம்பிராணிபுகைகாட்டி இடுப்பில்கட்டவும்.




இந்த ௰௨ஹூ கிரகசாந்திகளும் அனுபோகப்பட்டது

ஹரி ந் து

பாலவைத்தியபோதினி

முற்றிற்று.

